786






# வேதமெஞ்ஞான நூல்

இஃது

அபிராமம்,

## ஆ. மீ. இ. காதர்முகையதீன்

அவர்களால் இயற்றப்பெற்றது



மதுரை

ஷம்ஸியா பிரஸில் பதிப்பிக்கப்பெற்றது

1933.

]                [ரிஜிஸ்டர்.

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

## முகவுரை.

நினைவெனு நினைவுக்குள்ளே நிறைந்திடு மறிவுபொங்கி
மனமெனு வுணவுக்குள்ளே மண்டியிட் டுருகிவாடி
கனமெனு மௌனவேத கருணைமெஞ் ஞானநாலே
தனமெனு வுளத்தில்பாட தனியவன் காப்புத் தானே



### விருத்தம்.

கனஞ்சொரியு மெனதுகுல கருவைக் கேளுங்
 கழல் சூழ்ந்த தெட்சண பூமிக்குள்ளே
மனஞ்சொரியு திருநல்வெளி மதியத் துள்ளே
 மலர்சூழு விசையநகர் மாலுக் குள்ளே
தனஞ்சொரியு பொட்டக்குளம் பூச்சிக் காட்டில்
 தனியவன்தன் கிருபையினால் தளிர்த்து நின்ற
குணஞ்சொரியு யெனதுகுலக் கொழுந்தாய் வந்த
 குருமணியாம் அகம்மதுசா குலமும் நானே

### விருத்தம்.

ஆண்புலி அமுர்தம்பொங்கி அரும்பெருந் தவத்தில்மிய்யான்
 கான்புலி மீராமுகையதீன் கருவதி லுதித்துவந்த
தேன்புலி இபுறாஹீம்தன் செல்வனைச் சிறக்கயெங்கும்
 தீன்புலி காதிர்முகையதீன் திருக்கவி பாடினேனே

பாடிடுங் கவிகள்மீது பற்பல பிழைகள்வரினும்
 நாடிடுங் கவிகள்மீது நற்சொற்கள் தவறிவிடினும்
தேடிடுங் கவிகள்மீது திருநடை திருகிவிடினும்
 ஆடிடும் பிழைகள்தீர்ப்போ ரடியிணைப் பணிகுவேனே.



உ

மதுரை, ஷம்ஸியா அச்சு இயந்திரசாலை நிர்வாகி
கவிராஜன், நீ. இராமசாமி சேர்வை அவர்களின்

# சாற்றுப்பா.

---

## விருத்தம்.

கையதனுற் றோட்டாலும் கைமணக்கும் பாசுவையிற் கலந்ததேனை
கங்குல்பகல் உண்டுரீங் காரஞ்செய் தோர்க்குமோக்ஷ கதிதான்கிட்டும்
துய்யமொழி சோல்லும்நா சுவைமணக்கும் மணம்மாரு சுருதிகீதச்
சுவைவேத மெஞ்ஞான நூல்புகன்ருன் இபுருஹின் தோன்றல்என்மேற்
மெய்யன்பு மிகக்கோண்ட காதர்முகை யதீன்புலவன் வேதகீதன்
விற்பனர்க ளுரைஅபிரா மத்திருமா நகர்வாசி விளங்கச்சோன்ன
செய்யபோரு ளார்ந்தஇந்நூல் சிறந்தோங்க! உலகினர்க்குச் செந்தமிழால்
செய்தனன்நூல் அவன்உதவி மறக்கோணு துலகத்தீர்! செய்தான்நன்றி!!





கீழக்கரை சேகரம், ஏறுபடி தருஹாவில் கிராம பங்காளிகளில்
ஒருவரான, ப. லெ. சே. லெப்பை தம்பி லெப்பை என்ற
பட்டத்து லெப்பையவர்கள் இயற்றிய



## சாற்றுக்கவி.

---

### விருத்தம்.

திரைசூழ்ந்த புவிமீது திகழ்பரவு தென்னாட்டில் சீர்செறிந்து
நரைசூழ்ந்த நபியிரசூல் நலிவுறு கருணையென் னுளமோங்க
மிரைசூழ்ந்த அறன்கடையில் நிலையகற்றி மேதைமெய் மறைதுலங்கும்
நிறைசூழ்ந்த வணிகர்குல மாக்கள்மிகு அபிராமம் நகரில்வாழ்வோன்

பரநிறையோன் தனைநிதமும் பயிலரவே துதிபுரியு பாக்கியவானும்
மறைநெறியுந் தவறாத அன்பிலுய ரிபுராஹிம் அருந்தவத்தில்
தரணிதனில் வந்துதித்த தகமையுறும் புதல்வனென தருகையுள்ளான்
சரணமுயர் பலகலையுங் கற்றுணர்ந்த சர்குணத்தின் தவமுள்ளோனே

வேதமெஞ் ஞானமணி விகசிதத் திரட்டதுவை விரிவாயிந்த
பூதலத்தில் பலமாந்தர் புண்யமுள நிலையுணர்ந்து புன்மையற
நீதிசெறிந் தோங்கும்புகழ் நெடியவனை இறஞ்சிடவும் நிகழ்த்தினனும்
தீதருங் காதிர் முகையதீன் புலவனெனத் திறமைதானே.

---



## அபிராமம் ம. சேகு மூகையதீன் அவர்கள்
## இயற்றிய சாற்றுக்கவி.

---

### விருத்தம்.

அவ்வளின் திருமணியாய் யகமிய மெய்ப்பொருளாய் அமரருக் கரியாதுநற்
திவ்யமுட னேஇருந் திசைபலவுந் தோற்றிட செல்வராம் அப்துல்லாவின்
கொவ்வை யிதழாமினர் குறையறு மகவெனவே கொள்கையுட னேயுதித்து
செவ்விமிகுந் தீன்பயிர் செயிரா விளைத்திட்ட செய்யதிர சூல்நபியுல்லா

அன்னமமு கருணையது அனுதினமு பெருகிவளர் அடல்செறியு அபிராமில்
நன்னயந் தருவேத நீதிநெறி தனையமென் ஞளுமற வாதவேந்தன் [வாழ்
வன்மைமிகு புண்யனும் வறிஞோர்க்குப காரனு வன்மைஇபு றாஹீமென்
கண்யமுயர் கனவானின் கலியற வுதித்திடுங் கண்மணி யானபுதல்வன்[போன்

இகழ்பாவு பாவவினை ஏதம தகன்றிட எழில்மறை மீதில்சொற்றுந்
திகழ்பாவு வேதமெஞ் ஞானமணி நூலினை ஜெகமீதில் பலமாந்தர்கள்
அகமதி லுணர்ந்துமே அருந்தவம் புரிந்திட அன்புடன் தான்மொழிந்தான்
புகழ்மிகுங் காதிர்மு கையதீன் புலவனெனு புனிதமிகு கவிவல்லோனே.

---

## அபிராமம், சா. செய்கு மூஹைறயதீன் அவர்கள்
## இயற்றிய சாற்றுக்கவி விருத்தம்.

சீர்மேவு அபிராமம் நகர்வாழு யிபுறுஹிம் புதல்வனென்போன்
பேர்மேவு ஆவனு காதிர்மு கையதீன் பிரபல்யமாய்
நேர்மேவு வேதமெஞ் ஞானமந்நூல்தனை நிகழ்த்தினன்நன்
நார்மேவு யாவரும் புகழுதற் கரிகான நடினந்தானே.



بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

786



# வேதமெஞ்ஞான நூல்.

வெண்பா

கருவி லமைத்தபடி கட்டளையி விட்ட
உருவி லமைத்தபடி யோத இறைவா
மதியிலே நீயிருந்தென் மனமதிலே யொன்றிப்
பதியில் கவியுரைப்பேன்பண்.

---

விருத்தம்.

ஒன்றுக்குள் நானே நின்று உரும்பொருள் தன்னைக் கண்டு
தன்னுக்குள் யென்னை விட்டு தலைவனும் நீயா மென்று
சொன்னவன் நடுவே கண்ணிற் சுடரொளி வதனைக் காண
பின்னலை நீக்கி யெந்தன் பெரும்பதி வருகு வாயே.

வேறு.

வேரில்லா மரமொன்று பிரிவு ரெண்டு
விதைமூன்று கவர்நான்கு வெளியு மைந்தாம்
தூரில்லா தரமாறு கணுக்கண் யேழு
துறையெட்டு துளையொன்ப தான பத்து
பேரில்லா பத்திரண்டு ரெண்டுக் குள்ளே
பெருகுக் தளிர் பூவோடு காயுமாக
நாரில்லா பழம்பழுத்த கனியை உண்ண
நாடினவன் நாமவனை நாடு வோமே.

அகாரமெனக் கடல் எழுந்து இருநாள் நீங்கி
அக்கடலில் வெகுநாளாய் நீரில் லாமல்

உகாரமெனச் சலம்பெருகி பெருக்குண் டாகி
ஒன்றுடனே வொன்றடித்து அலைகள் மோதி
மகாரமென மருத்தபத்தில் மாவாய்த் தம்மாய்
ஜெம்மாகி முச்சுளி மூன்றலிபு மாகி
சிகாரமென வெங்கெங்கும் நிறைந்து நின்ற
தேவாதி தேவனெனும் தேவன் காப்பு.

தன்ஷீஹறு.

அருவற்று உருவற்று அழிவற்று பொலிவற்று
ஆர்ஊர் பேருமற்று
அமைப்பற்று சுமைப்பற்று ஆணற்று பெண்ணற்று
அன்னைபிதாவுமற்று
கருவற்று உருவற்று கலையற்று சிலையற்று
கல்பெனுங் கடலுமற்று
கண்ணற்று மண்ணற்று காதற்று மூக்கற்று
கையுடன் காலுமற்று
இருளற்று மருளற்று இறப்பற்று பிறப்பற்று
எங்கும்பல ரூபமற்று
இனிப்பற்று புளிப்பற்று கசப்பற்று துவப்பற்று
இச்சைருசி தானுமற்று
உருவற்று கருவற்று உணர்வற்று மணமற்று
வொப்புவமை யொன்றுமற்று
உலகெங்கு நிறைகின்ற றஹுமானின் திருநடனம்
உகந்துயிக் கவி யிசைப்பாம்.

தஸ்பீஹறு.

அருவும்நீ உருவும்நீ அகமுநீ புறமுநீ
அறிவினுக் கறிவுநீயே
அருளும்நீ பொருளும்நீ அதபுநீ மதமுநீ
அவ்வலு ஆகிர்நீயே
கருவும்நீ யுருவும்நீ கவியும்நீ புவியும்நீ
கதிரெனும் மதியுநீயே
ஹாதிநீ நாதிநீ ஆதிநீ சோதிநீ
கம்றெனுஞ் சம்சுநீயே

இருளுநீ மருளுநீ இகமுநீ பரமுநீ
இருவினைப் பொருளும்நீயே
இன்பம்நீ துன்பம்நீ அன்பும்நீ பண்பும்நீ
இருகலை தனிலும்நீயே
உருவும்நீ கருவும்நீ ஒன்றுநீ றென்றுநீ
உம்பர்க் குயிருநீயே
உலகெங்கு நிறைகின்ற ரஹ்மானின் திருநடனம்
உவந்துமிக் கவியிசைப்பாம்.

---

வெண்பா.

முப்பாலுக் கப்பால் முழங்கும் முழக்கமதை
தப்பாம லெப்போதுந் தனித்திருந்து—அப்பாலுங்
கடந்து நடந்து கடுவெளியைத் தான் கடந்தால்
தொடர்ந்தமெஞ் ஞானமணி தோணும்

கடவுள் துதி.

ஆவென யெழுந்து அறிவுக்குள் ளுறைந்து
அஹதெனும் பொருளதாய் மறைந்து
ஈயென யெழுந்து ஈரேழில் பறந்து
இறையுக தெனுந்துறை துறந்து
ஊவென யெழுந்து வுருவடிபுரிந்து
உறையெனும் வாஹிதில் சிறந்து
ஓமென யெழுந்து உலகெலாம் நிறைந்த
உடையவா வுனதருள் யாகூ

இல்லென யெழுந்து யிருளுநாள் மறைந்து
ஏகமாய் இறையருள் சுரந்து
குல்லென வுறைந்து எவ்வுயர்க் குயிராய்
கூவெனக் குடியங்கு புகுந்து
சொல்லொணு திருந்து சொல்லுக்குள்ளொளிந்து
சுருதியா யெங்கெங்கும் நிறைந்து
சில்லெனப் பறந்து ஜெகமெங்கும் நிறைந்த
வள்ளலே யுனதருள் யாகூ

தானேநீ தனியாய் தனிய வெண்மணியாய்
தரித்தமெய்ப் பொருளெனுங் கனியாய்
நூனுக்குள் ளொளியாய் காபெனுங் கருவாய்
நூரில்வெண் டரளமண் மணியாய்
தீனெனுங் கனியாய் திகழ்சுவை யமுதாய்ச்
சிறந்தொரு தீபமாய் யெழுந்து
கோனெனுங் கனியாய்க் குணமதில் மறைந்த
குதாவேயுன் திருவருள் யாகூ

அலிபுக்குள் ளொளியாய் அழிவில்லாப்பொருளாய்
அனைத்திலும் மனத்திலு மறைவாய்
கலியென வெளியாய் எவ்வுயர்க் குயிராய்
கண்டிடக் கணுவினுக் கணுவாய்
ஒலியுடை ஒளியாய் உலகெங்கும் விரிவாய்
வுறையும்பொன் பலபணி தினியாய்
மலியுநற்பணிதி மறையும்பொன் னினமில்
மறையவா மறையருள் யாகூ

வேறு.

அல்ஹம்ந்து வில்லாஹி யெனும்பொருளை
அகத்திளி விருத்தி நானறிந்து
சொல்விடும் புகழெல்லா மவன்தனக் கென்
றுறுதிகொண் டெனுமன முவந்து
வில்லும்அல் ஹம்ந்தில் எட்டெழுத்த தனிற்
விளங்கிய வோரெழுத் ததனை
அல்லியும் குளம்போல் அழுத்தியென் னுளத்தில்
அறைந்தருள் புரிந்திடும் யாகூ 1

விண்டிடும் ரப்பில் ஆலமீ னென்று
விழுந்தடி பணிந்து யென்சிந்தை
கண்டிடும்படிக்கு தொண்டனை புரிய
கவர்ந்திடும் நபுசதின் விந்தை
கொண்டும் படிக்கு நின்றெனுங் குணத்தில்
கூடியே தீன்நபி பந்தை

அண்டிடும் படிக்கு எனக்கருள் புரிந்துன்
அடைக்கலம் மருள்கொடு யாகூ 2
அற்றஹ் மானே யனுதின முனது
அன்பு வைத்தெங்களை நாளும்
நிற்றஹிம் மென்று நெறியுறுமுமீன்
நினைத்திடும் கருத்தினில் லுறைந்து
சிற்றினில் நின்று நாருனில்லாகி
சிறந்திடு நாருனில் லாகி
சற்றிந்த வழியை அறியயென் னுளத்தில்
தவம் வளர்ந் தேறச்செய் யாகூ 3
மாலிக்கி யரசை மனந்தனிலிருத்தி
மாசில்லா யவ்மித்தீன் மணியை
கூலிக்கி நாங்கள் வேலைகள் செய்து
கொடுத்திடும் பதவியா மதனல்
சாலிஹி ஞகி சங்கையா யுனது
தாளடி போற்றிநின் றெளியேன்
மாலிக்கி யேவுன் மனமது யிரங்கி
மௌனத்தில் லிருக்கச்செய் யாகூ 4
இய்யாக்க நஹ் பத் திணையிணை யில்லா
இறைரப்யில் ஆலமீ னென்று
மய்யலாய்யுன்னை வணங்கினேம் நாங்கள்
வருசையாய் மனம்மிக மகிழ்ந்து
இய்யாக்க நஸ்த்த ஹினெனும் பொருளை
இருத்திவுன் நிலையன்றி வேறே
செய்பவ ருதவி யிலையென நாடி
சிந்தையி லுறைந்தருள் யாகூ 5
எகிதின ஸீருத்தல் முஸ்த்தக்கீ மென்று
இன்பமுற் றிருவடி போற்றி
தகுதியில் லாத மடமையை நீக்கி
தவிர்த்து நான் புகழினைச் சாற்றி
மிகுதியாய் நேராய் மீண்டிடும் பாதை
மின்னிய தாமரைக் குளத்தில்

வகுத்த மெஞ்ஞானம் தொகுத்தருள் புரிய
வாக்கெனக் கருள்புரி யாகூ. 6

அலைவிலாகைரில் மஹாலூபி யென்று
அலைகிம்வலல் லாலீன் ஆமின்
நலமாய் நாஞேதி நவிலுந்து வாவை
நாடியேகவல் செய்து நாளே
சுலைஹாக்க ளுடனே அருஷினின் கீழே
சூட்டுவாய் மஹாசரின் வேலை
தலைமூளை கொதித்து தவித்தழும் போது
தவறச்செய் யாதே நீயாகூ 7

வலம்புரிச் சங்கில் வளர்ந்திடு நூறை
வணக்கத்தின் கணக்கினுள் ளாக்கி
தலமதில் நபியின் சபாயத்தில் லெம்மை
தங்கிடும் படியருள் தேற்றி
பலவெனும் வாசிப் பரைதனி லேற்றி
பத்தெழுத் தானதின் கிருபை
இலங்கவே யெனக்கு ஈந்தருல் ஞானம்
இன்பமாய் அச்சுவை யாகூ. 8

உரக்கவே உறக்கம் வெறுத்தனு பவத்தால்
உண்ணமு தூட்டியே கருத்தில்
பரக்கத்தைப்பெருக்கி பகைதனை யறுத்து
பாசிக்கின் குணங்களைத் தரித்து
இரக்கத்தைப் புரிந்துன் இன்பத்தை யெடுத்து
யிராறு கலைதனைப் பிடித்து
மரக்கல நபியின் அடைக்கலம் புகவே
மனமருள்புரிந்தருள் யாகூ. 9

வருவரும்துன்பம் வஞ்சகக் குபாடம்
வாக்கில் வராமலே சூட்டி
பெரும்பெரு நோய்கள் பித்த சல்லியம்
பிடித்திடாக் காய்ச்சலை வாட்டி
தருந்தரு மாவை பிசைந்துநான் ரொட்டி
சமைத்துநான் புசிக்கவு மூட்டி

திருமறைக்குருவான் உறும்மனம் முறையும்
செம்மைஎன் மனத்தில்செய் யாகூ 10

மகுத்துட வறுமை மறையவர் கொடுமை
மதிப்பினி லடங்காதிப் பாரில்
வருத்திடு மெளியேன் முன்னிலை யிபுலிஸ்
வருகுவான் ரூபமு மாறி
தொகுத்திடு மினியன் அகத்தினில் விழாமற்
துணையருள்த் தந்தெமன் மலக்கு
பகுத்திடும் றாகை வாங்கிடும் போது
பலன்கலி மாத்தரும் யாகூ 11

கபுரினில் லென்னை முன்கர்நக் கீறுக்
கடுந்திடுங் கேள்வியைத் தனித்து
சபுராதாய் மலக்கு சபபிடும் மொழிக்கு
சலிப்பிலாப் பதுல்லவர்க் குரைத்து
பவுரதா நம்மை பலன் தனிவிருத்தி
பாழ்நர கென்னைவிடத் தவிர்த்து
தவுரெனுஞ் சுவர்க்க பதிதனில் விருத்தி
தவமுற அருள்புரி யாகூ 12

நரகம்வ ழுதனிற் தீவினை முழுதும்
நாடிய நாயக னறிய
தரமுளோ ரொருவர் அறிவதற் கொன்று
சர்க்குணன் துணையது அல்லால்
வரமது யெவர்க்கு வுண்டோயிவ் வுலகில்
வல்லவா யுனையன்றி வேறே
தரமெவர்க் கில்லை வரமெனக் கருளும்
தனியவா யுனதருள் யாகூ- 13

அன்றுநாள் எழுதும் பண்டயன் எழுத்தை
அழித்ததை எழுது வல்லபமும்
உண்டுமே யுனக்கு உமையல்லா தெவர்க்கு
உண்டுமோ உரைத்திட இல்லை
கண்டுகான் ஏழை பசுவைவிட் டகன்ற
கன்றது போல்மனங் கலங்கி

தொண்டுகள் புரியும் வண்டனென் பிழையை
துரிதமாய்த் தொலைத்தருள் யாகூ. 13

## சர்க்குரு நபிதாயகம் அவர்கள்மேல் துதி.

அரியெனப் பனிகள் சொரியகல் லமுர்தம்
அலையெழுந்த லருமன் னுளில்
புரியெனத் திரண்டு வளர்ந்தொரு முத்து
புகழெலா மது தனக்காகி
சரியெனப் புரியில் வளர்ந்தொரு முத்து
சருவகல் ரகசியம் முணர்ந்து
விரிவென அழகாய் யெங்கெங்கும் நிறைந்த
விமலனன் முகம்மது நபியே
கடலொடு வானுங் ககனேடு அருஷு
கனலோடு பலகையின் கலமும்
மடலொடு மனுவு மலக்குமெவ் வுயிரும்
மமைக்குமுன் னிருளுக்குள் வெளியாய்
திடனெடு நுக்கத்தாய் அலிபுலா மீமாய்
திரண்டொரு தீபமா யெழுந்து
இடமொடு வலமாய் நடன மிட்டாடும்
இறையவன் முகம்மது நபியே
வேதமெய்ப் பொருளாய் விளங்கும்நற் கருவாய்
வெண்டா ளமுதெனுங் கனியாய்
மாதவப் பொருளாய் மனம்வலம் புரியில்
மகிழ்ந்தொரு முத்தெனும் வடிவாய்
நீதவப் பொருளாய் ஆதவக் கருவாய்
நிறைந்த யவ் வுயிர்க்கும் நீ நிலையாய்
ஓதநற் பொருளாய் உலகெங்கும் நிறைந்த
உடையவன் முகம்மது நபியே
மனம்வலம் புரியில் மனங்கமழ் வடிவாய்
மகிழ்தொரு முக்தெனும் கெடியாய்
கனம்புரி யினமாய் கௌதுதன் வழியாய்
கருவரு வுருவமின் தெளிவாய்

தனம்புரி தனமாய் அகமியப் பொருளாய்
தந்தெனு வாக்கினுள் ளுறைவாய்
தினம்புரி வுணர்வாய் திகலொளி முததாய்
திரண்டவன் முகம்மது நபியே

---

## சர்குருவாகிய மொய்தீன் அப்துல்காதிர் நாயகமவர்கள்மேல் துதி.

வானொடு வானு மற்று அலைகடல் லோக மேழும்
மீனொடு பார்மின் னொடு மிவை யெலாம் ஆகு முன்னல்
தானொடு தானேன் தானும் தனித்தவவ் விருளின் வெளியால்
தீனொடு வெளியே வந்த திவ்யபா முகைய்ய தீனே 1

சித்திலே வித்து ஒன்றில் சிறந்திடும் கொப்பு மூன்று
நத்திலே முக்துப்பச்சை நடுவிலே பவளத் தோடு
குத்துளே நின்று வெளியாய்க் குலந்தனி லதனிலொத்த
ஹாத்தவன் னொளியாய் வந்த கௌதுயா முகைய்யதீனே 2

ஒருமுகமாக யெங்கும் முருவருசுரு பில்லாமல்
வருமுகமாக யெங்குமதியெனுங் கதிருய்த்தோன்றி
திருமுகமாக யெங்குந் தீபமாய் விளங்கி நின்றே
குருமுகமாக வந்த குதுபெனு முகைய்யதீன் 3

தாத்தினில் நீரு மண்ணுந் தாயென ரூப மாகி
காற்றுட னனலுஞ் சீறி கதிரெனுஞ் சீவ னாகி
சேர்த்தெழுஞ் சோதி ஐயர் திசையதில் நூறெ ழுந்து
ஆத்தும வெளியாய் வந்த ஆதியின் முகைய்ய தீனே 4

அலிபுக்குள்ளொளிவாய் வந்து அலிபுலோர் லாமெழுந்து
ஒளிவெனு லாமுக் குள்ளேஒளிந்ததே அலிபு தானும்
சுளியெ னுலாமையல்லால் தோன்றுவ தொன்றுமில்லை
தெளிவினுந் தெளிவாய் வந்ததேவறென் முகைய்யதீனே 5

ஹம்ந்தேனுங் கருவுக்குள்ளெ காவேனுங் ஆரூக்காகி
ஹம்ந்தெனு மீமுக்குள்ளே கருணைமீம் மஹாரூக்காகி
ஹ்ம்ந்தெனுங் தாலுக்குள்ளே ஹாமீ மெயாசினகி
ஹம்ந்தெனுங் கொடிக்குள் என்னை காக்குயா முகைய்யதீனே

சுருபமில்லாத மக்காம் சுருதினிலரசிரசாம்
அருபமில்லா தூஷாது அடங்களில் முன்பின்காண
கருவில்லா சுக்குன் மணியாய் கமலமா வாயல் முனையாய்
திருவருள் ஐனுய் வந்த தில்லுயா முகைய்யதீனே 7

நாளுட னெட்டு வொன்றும் நாற்பது தன்னில்க்கூடி
சூளுடன் சூல்ற சூலாய்த் தோன்றிய உயிர்கள் யாவும்
ஆளுமா லாயிலாவில் அடங்களும் மறைந்துநின்ற
கோளத்தை யெனக்கு காட்டும் கூவுயா முகைய்யதீனே 8

ஆர்ப்ப நாற்பது யெட்டொன்று அமைந்தநால் முப்பதூடே
கார்ப்பதில்லாதமாகி காண்ப தைம்பொறியுமாசி
சேர்ப்பதே வேதமாகி ஜெகமெங்கும் நிறைந்துநின்ற
தீர்ப்பதை யறியவேண்டி செய்யுயா முகைய்யதீனே 9

சத்துக்குள் சத்தாய் நின்று சகதுக்குள்ள சத்துவந்து
சத்து சித்தானந்தத்தில் சாக்குன் மூன்றுமென்றுய்
முத்துக்குள் வித்தாய்நின்று முதல்ப்பொருள் தன்னிலாகி
பத்துடன் நிரண்டு ஒன்றுய் பதியுயாமுகைய்பதீனே 10

நாலினை பின்றென்றுக்கி நடுவிலே யெழுந்து ஞானக்
கோல் முனையருகில் மெல்ல குடிபுகுந் தருக்கங்கொண்டு
வாலினையெடுத்து வேங்கை வரிப்புலி தன்னைக்கொல்ல
நூலினையெனக்குக் காட்டுப நூதன முகைய்தீனே 11

நம்பிய கமலத்துள்ளெ நறை கமழ்க் கலிமாத்தன்னை
கெம்பியே நித்தம் நித்தம்ங் கிருபைக்கண் ஐனுக்குள்ளே
பம்மிய ஜெம்மில்லுள்ள பரமுகந்தன்னைக்கண்டு
கும்பியே பணியச்செய்யும் குதாவெனும் முகைய்யதீனே 12

பொன்பல பணிதியாகி பூவையர்க்காளுமாகி
பின்பணிதீ பொன்னுகி பிரிவுருவாருவோனின்
நன்னிலை தன்னுக்குள்ளே நடுநிலை அலிபா யெந்தன்
கன்னிலே மணியாம் ஐனில்க் காட்டுயா முகைய்யதீனே 13

ஐம்புலன் னைய்ந்தும்போக்கி ஐனெனுநிலையிலாக்கி
பொய்யைந்து பூதம்போக்கி பொறியைந்து நிலையுமாக்கி
மெய்யைந்தை மேல்மையாக்கி மேல்வன னவிளையை நோக்கி
தூய்யவனைத்தெளிவைக் காணத் தொடருயா முகைய்யதீனே. 14

## நாகூர் ஷாகுல் ஹமீதொலி நாயகமவர்கள் பேரில் துதி.

வேதம் மெப்ப்பொருளா யெங்கும் விளங்கிய வேதபோதா
தோதகமகற்று நீதா துதி புரிந்தோர்க்கிப் போதா
பாதக மகற்றும் நாதா பலவுயிர்கருளுஞ் சாதம்
நீதரு நாகூர் வாழுக செய்குயா ச்சாகுல்ஹமீதே 1

நாற்றிசை யோர்களெல்லாம் நலிசவுருக்கமலப்பாதம்
சேட்டமாய்த் திரள் திரளாய் தெரிசினை செய்து அன்னோர்
போற்றியே பணிவோர் தங்கள் பொற்பதமதனைக்காண
தாஸ்ட்டிக நாகூர்வாழுஞ் சைய்குயா சாகுல்ஹமீதெ 2

மெய்த்தவ முணர்ந்து பூவில் மேல்வனருளினாலே
அய்யமே அணுகா துந்தனடியினைத் தொழுவோர்க்கில்லாம்
கைதவமகற்றி ஞானக் கருத்தினைவிருத்தி யோகஞ்
செய் முறையருளு நாகூர் செய்குயா சாகுல் ஹமீதே 3

கைதவமகற்றி மேலாம் கதிதரு வழியை நோக்கி
மெய்தவமதுமே பூணும் மேன்மையிற் சிறந்தோரெல்லாம்
கையடை யெனக்கொண்டாடும் கருணரே யேழை யெந்தன்
செய்குற்றம் பொறுக்கு நாகூர் செய்குயா ஷாஹுல்ஹமீதே 4

மிறைதரும்பாவமென்னு மிருளதையகற்றி நெஞ்சில்
நிறைதிரும் அகமியத்தின் நிலையுறுவதனைக்காண
சிறையிடும் பாசநாச சேவடிதனில் செல்லாமல்
திறனருள் புரிவீர் நாகூர் சைய்குயா சாஹுல்ஹமீதே. 5

---

## ஏர்படி செய்யது இபுருஹீம் அவுலியா நாயகமவர்கள் பேரில் துதி.

வேதமே நான்க தான விரிதரும் புருகான்மீது
காதலோடுணர்ந்து ஞானக் கருவதைக் கருத்தில் பூண்டு
தீதலார் குபிறை வென்று திருக்கலிமாவைக்கொண்டு
சாதுவக் கொடியை நாட்டுஞ் சைய்திபுருகி மொளிபே 1

செல்வியே நிறை தென்னாட்டில் செறுனர்கள் தன்னைவென்று
வல்லுயர் வேதந்தன்னை வாகுடன் விளக்க எந்தன்
கல்வியைக் கல்புக்குள்ளே கலஞ்சியமாகவந்த
தில்லுக்குள் ஒளியாய் நின்ற செய்திபுருகி மொளியே

கரும்பதின் சுவையேயென்றும் கசப்பென வெண்ணும் மாந்தர்
அரும்பதின் வாசம் தன்னை அறிகுவாற்றியுவாரோ
விரும்பியே யுமதுபாதம் வேண்டிடா ருறவகற்றி
திருநிறை சரணருள்வீர் செய்திபுருஹீ மொளியே 3

பெரும்புகழ் சூழ்யெங்கும் பிரபலமாக வந்த
குருநபியிரசூலுல்லா மேகாகரும் பேராக
மருவிலா பாண்டிநாட்டில் வள்ளவா வளங்கநின்ற
திருமறையோர்பாடி செய்திபுருகி மொளியே 4

---

## யில்மில்ஷான் படலம்.

### தோங்கள்.

நாலுயிருளுக்குள் ளிருளாகவே
நாடியனைத்தையும் படைக்க முன்னாள்
சாலும்கண்சுபி மஹா பூபிலே
சாடுநானெனு னாறெழுந்து
சீலங் காபுடன்னிரன்று மொன்றாய்
சேர்ந்து வருகின்ற நான் தனிலே
தூல பயக்கூனாய் வெளியே வந்த
சூழச்சியறியவே சொல்லக் கேளாய்

ஆதிஜமாலெனுங் கடலா மொன்று
அந்தச் கடலது உப்பு நீராம்
நாதிச்ஜலாலெனுங் கடலாமொன்று
நாவுக்கடங்காத நல்லநீராம்
சோதிக் கமாலெனுங் கடலாமொன்று
சொல்லத் தொலையாது சொல்லக் கேளாய்
சாதி நடுவிலே திரையாய் நின்று
சாற்றி மறைத்திட்ட சரியீதாமே

மறைந்த யிருளது வெளியாகியே
மாரிச்சானெனும் பேரேடுத்து
பறந்த ஜானெனும் பேரினலே
பன்பு அசாசெனும் நாமஞ் சூட்டி
நிறைந்த யீரேழு உலகைத்திற்கு
திவ்ய தலைவனாய் விளங்கிநின்று
சிறந்த அருஷிலே யிவன் காபருய்ச்
சேர்ந்தங்கிருக்கின்ற செயலைக் கண்டான்

கண்டான் யெழுத்ததைக்க கண்டு அவன்
கலங்கி மனங்நொந்து மலங்க லானன்
கொண்டான் பலவிதங் கோலங் கொண்டான்
கொடுமையானதற் கடுமை பூண்டான்
விண்டான் நம்மோரை கெடுக்கவந்தான்
வேதமானதை தடுக்க நின்றான்
சண்டாலன் செய்யுங் கோலங்களை
சாற்றமுடியு மோசரம் போலவே

அன்னாள் யெழுந்திடும் நூனதுவும்
அடியில் முடிநடு மூலமாகி
தன்னால் லஹதியத்துக் துமாகி
தானெவாஹிதாய் தானெழுந்து
குன்னென்ற ஆலம் அருவாகுமாய்
கூடிமிதாலுடன் அஷிஷூமாக
பன்னாள் வெளிபட்ட இன்ஞ்சானுமாய்
பாரில் வெளியான ஆதமிதே

முன்னாள் உரைத்திடும் கடலானதில்
முத்தொன்றிக்குது முடிவிற்குள்ளே
தன்னாள்யெழுந்திடும் கடலுக்குள்ளே
தரித்துயிருந்திடும் முத்ததுவை
கன்றுசெனுவலை தனைக்கடந்து
ஹாதியெனுமனை தனில் புகுந்து
மன்னேனுரைத்திடும் மறைமொழி போல்
மலர்ந்தமணி முத்தை மனங் கொள்வாயே

யேற்றமாகிய ஹாதி தன்னை
எடுத்துப் பேசவும் இடமுமுண்டோ
பார்த்த பேர்க்கது தெரியுமென்று
பரமநபி சொன்னார்க் கொருவானிலே
கோத்த ஹாதியை யறியவென்றால்
கூறமுடியுமோயிப் புவியில்
கார்த்தபேர்க்கது காட்ட வல்லால்
காராதவர்க்குமே காட்டொண்ணாதே

பத்துக் நிறத்திலே நிறைந்திருக்கும்
பரமக்குடத்திலே மறைந்திருக்கும்
சத்துக்குடத்திலே சமைந்திருக்கும்
சமதுக் குடத்திலே உறைந்திருக்கும்
சித்துக் குடத்திலே சிறந்திருக்கும்
செம்மைக்குடத்திலே திரண்டிருக்கும்
குத்துக் குடத்திலெக் குவிந்திருக்கும்
கூவு நிறமது பச்சையாமே

பச்சைநிறமதை யறியவேண்டி
பாட்டிலுரைக்கிறேன் பாரிலோர்க்கே
யிச்சைதனை நீக்கி கூவதுவை
எந்த நேரமு காவிராக்கி
அச்சைக் கப்புறம் தான் கடந்து
அசலாந்தலத்திலே யிருந்துகொண்டு
மச்சந் தனைக்கண்டு வணங்கினவர்
மௌலாநபி சொன்ன மறைப்படியே

முறைத்த மொளிதன்னை சொல்லகேளு
உண்மையாக யுன்னை நீக்கி
மறைத்தயில் லேனுந்தலமதிலே
மறைத்த றஹ்மானை முன்னிருத்தி
யிறைத்தசி பத்தெல்லா யிரவலென்று
யெங்கோன் சிபதத்தை யெடுத்து கொண்டு
நிறைத்த மஹ்மூதா யெனுந்தலத்தில்
நிறைந்த கண்ணாடிக்குள் ளொளிவே

கண்டு அறியவே சொல்லக்கேளாய்
　　கருணையுடன் பேச்சுமூச்சு மற்று
விண்ட பார்வையுங் கேள்வியற்று
　　வினையா மனமற்று தனமுமற்று
கொண்டபாசமு நேசமு மற்று
　　கூறுங்கல்புடன் ஞசையற்று
செண்டங் கஹ்ஹாபாவில்க் காபகபு
　　சைனிசுல்த்தான் னன் னஷிறுவிலே
பாரும் ஒருகாலி லிருந்து கொண்டு
　　பாரும்பரன்றாகூ குதுஷியிலே
கூரு றாஹ்ஹடன் உறவாடியே
　　கூவுக்குள்ளு நீ குடிபுகுந்து
தேருவுணர்வோடு அறிவினூடே
　　சேர்ந்தங் கிருக்கின்ற போதினிலே
நூரு துலங்கியே கண்ணுடியில்
　　லொளிவு வெளியாகும் பொருளிதுவே
பொருளாயிதுவு நாம் முன்னிருந்த
　　பொருளையறிவது பருளா மென்று
பருளாம் பொருளதை பரமனென்று
　　பாரில்லிருப ரெல்லாம் மிரவலென்று
கருவாயிருதய மதனிர்க்காண
　　ஹக்கு கலக்குமாய் யொன்றுமாகி
உருவா அஹமது முன்னிலையில்
　　உவந்து யிருப்பது ஹாமிலாமே
கேளுங் ஹாமிமைச் சொல்லக்கேளாய்
　　கிருபை நாயகன் கிருபைகொண்டு
ஆளும் நபியுட யருமை கொண்டும்
　　அரசர் முகையத்தீன் அருளைக் கொண்டும்
சூளுநாலியா ருருமை கொண்டும்
　　சுவனத்தசை னுசைன் சுருதிகொண்டும்
நாமும் ஒளிமாரீன் அறிவைகொண்டும்
　　நாடியுறைக்கின்ற வழியிதாமே

வல்லோன் ஞெளிமார்கள் கிருபையாலே
வந்தவுஷா தெனும் வாக்கின் மேலே
நல்லோரின் சானில் வருஞ்சிபத்தை
நாடியுரைக்கவே நன்மை செய்வோன்
வல்லாரானும் பெண்ணிருவகையார்
வந்த விபரத்தை வரைய இனி
பொல்லோர் நல்லோர்களிதையறிய
புகழ்ந்தேனிபுருஹீம் புதல்வன் நன்றே

உண்டு பசியாறி இரவு காலம்
ஓசைய சரீரியான நேரம்
கொண்டு வடகலை இடகலையை
கட்டியறிந்துதன் மனையால் தன்னை
கண்டு மனங்கொண்டு மையல்கொண்டு
காணும் பதினாறு கலைமுஞ் சென்று
விண்டசுக்குனிலே கலத்தை நாட்டி
விரிவாய் நாவுகொண்டாடுவாரே

வந்தசுக்குனிலே மனதை நாட்டி
வழியால் நால்மூலை சுற்றும்போது
விந்துநாதனு மூன்றசைவால்
வெளியிலோடுவான் வெல்லம்போலே
அந்தநேரமே அவனின்னுசை
அடங்கி ஆயாசம் மிகவுண்டாகி
சொந்த மயக்கத் திலிருக்கும்போதே
சுருளுநங் கலந்தனை தொடருவாயே

கலத்தின் நாதனும் வெளியேறவே
காணும்பொழுதிலே மனைவிதன்னை
வலதுபுறமாகச் சூரியனில்
வந்தநாதனை நழுவ விட்டால்
அலவில் வடிவாக பெரியோராக
ஆணின் ரூபங்களாகு மென்றும்
இலகு இடபுறம் சந்திரனில்
இயங்கும் பெண்ணாறு விளைவதாமே

இரண்டு நடுவிலே தங்குங்காமன்
　　இலங்குங் குவலறை தன்னிலாகி
பிரண்டு அல்லியாய் விளையுமென்ன
　　பெரியோர் தான்சொன்னர் புராணங்களில்
திரண்ட விலாவிலே தங்கும்நாதன்
　　திகட்டாக் கனியெனச் செப்பினேனே
பரண்டு கனியினின் இயல்புசொல்ல
　　பாங்கு தெரிவீரே நபியும்மத்தே
விதியை விதியென்பார் சிலமானிடர்
　　விதிகள் வருகின்ற விடமறியார்
மதியை மதியென்பார் சிலமானிடர்
　　மதிகள் வருகின்ற மடமறியார்
பதியும் விதியுமாய் மதியுமொன்ருய்
　　பதிந்து வருகின்ற தலத்தைக்கண்டால்
துதிசேர் முஹம்மது மறையின்படி
　　சொன்னர் கதிதெனுங் குதுசியிலே
சொல்லுங் கர்ப்பமு முதல்மாதமே
　　சுகலெ னுஞ்சனி அதிகாரமே
வில்லு மறுரெண்டாம் மாதத்திலே
　　வியாழன் முஸ்த்தரி அதிகாரமே
மெல்ல வருமூன்ரும் மாதத்திலே
　　மீற்றிக்கெனுஞ் செவ்வா யதிகாரமே
நல்லமறு நான்காம் மாதத்திலே
　　ஞாயர் ஷம்றெனு அதிகாரமே
சூளு யிருமூன்ரும் மாதத்திலே
　　சுக்ருயெனு வெள்ளி யதிகாரமே
ஆளும் மும்மூன்ரும் மாதத்திலே
　　அதாரித் தெனும்புதன் அதிகாரமே
மூளும் திங்களி னேழாமாதம்
　　முழங்கு கமறெனு மதிகாரமே
நீளுஞ் சுகலெனும் எட்டாமாதம்
　　நிறையுஞ் சனியுட அதிகாரமே

மாத மொன்பதாம் மாதத்திலே
மகிமை வியாழத்தின் அதிகாரமே
நீத மொடுகர்ப்பந் தரித்துநன்றாய்
நிறைந்த பாலனும் வெளியேறவே
போத மொடுவேத மதனிற்சொன்ன
புகழை யறியவே புகன்றேனிந்த
வாதை யறியார்கள் உடலின்கூறு
வரவு அறியாரே வருநாளிலே

ஏழு கிரகங்க ளானதுவும்
ஏக நக்ஷத்ரங்கள் அதன்வழியாய்
தாழும் தஜல்லி யாதெனும்பால்
சார்ந்த தோற்றங் களானதனால்
வாழு மதுவதின் னொவ்வொன்றுக்கும்
வாரி மாரியே பலகுணமும்
பாழும் அதிகாரத் தோரணையால்
பாரில் இறையருள் சூழ்ச்சிதானே

வந்த சுக்கிலந் தந்தையுட
வருசை மூளையில் வழிந்தோடியே
சொந்த முதுகதின் வழியாகவே
சுழன்று வருமந்த சுருவதிலே
விந்தாஞ்சுரோனிதந் தாயின்மூளை
விளைவா லதிலிருந்தளர்ந்தோடியே
கந்தா வாரியெ எழுந்தாண்டி
காணுஞ் சக்கரக் கருவிலாமே

கருவி லுருவினி லிருக்கும்போது
காணுந் தந்தையின் பங்குநான்கு
மருவி வருந்தாயின் பங்குநான்கு
மன்ன னிறையவன் பங்குஆறு
சொருவி லுருவான முப்பங்கிலே
தொகுத்துக் கணக்கிட பதினாலதால்
அருபி யாயிரு எழுசிபத்தை
அறிந்து வணங்கிட அருளாகுமே

ஹக்காங் கடலிலே அலையதிலே
காணு கல்க்குழுக் கய்யதிலே
திக்கா சிபத்தேழு தன்ஞ்சீகிலே
திறமாஞ் சிபத்தேழு தஸ்ப்பீகிலே
பக்கா யிரேழு சிபத்தினிலே
பாருந் தன்ஞ்சீகு மஹ்ஹூபுபிலே
பொக்கா வாசியைத்திறப்படுத்த
புகழு வாசியேப் புகழ்க்கெட்டதே

இந்த விதிதன்னை அறியாமனும்
இறையோன் கர்ப்பனை யென்பார்சிலர்
வந்த வழியினை யறியாமலே
வாளுள் போகுதே யென்பார்சிலர்
சொந்த வகையாவு மறிந்தவர்கள்
சொல்லா ரொருபோதுந் துனியாவிலே
எந்த வகையில்நாம் உருவாகினேம்
என்ற இயல்பதை யுரைக்கக்கேளாய்

வந்த மணியினுல் இரத்தமாகி
வளங்கு வுதிரத்தில் சவ்வுண்டாகி
பந்தம் எழும்புடன் நரம்புண்டாகி
பத்தித் தசையுட னுருப்புண்டாகி
சொந்த மூளையும் விளைவுண்டாகி
துய்ய தொலிமூடி ரூபமதில்
விந்தை யாகிய ரூஹையூதி
விளங்க வெளியானேம் நம்போர்களே

கோரும் புலனைந்து பூதமைந்து
கொடுக்கு மெஞ்ஞானேந் திரியமைந்து
தேரும் பொறியைந்து காரணமைந்து
திரண்ட கண்மேந் திரியமைந்து
சாருந் தாதேழு கோசமைந்து
சாற்றும் மலமூன்று அவத்தையைந்து
வாரும் பிணிமூன்று வாய்வுபத்து
வாசலொன்பது குணமூன்றுமே

சீரும் புலன்பொறி பூதமோடு
செப்பு மாதாரம் ஆறுடனே
ஊரு மண்டலம் மூன்றுடனே
உற்ற மதிகாடி பத்துடனே
வாருந் தத்துவந் தொன்னூற்றாறும்
வந்து வளர்ந்ததுன் வாவியிலே
சேரு மிவ்வகை யறியாவிட்டால்
செத்தால் சுகமென்ன புவிதனிலே

பித்தம் மிகுந்தது நெருப்பினாலே
பிரவாதந் தண்ணீர்க் குணத்தினாலே
செத்த சிலேர்ப்பன மண்ணினாலே
செய்யுங் குணமுடன் ஐயமுமாய்
யுத்தி யுற்பத்தி யாகவெளி
உகைந் தனில்வந்த மனுடர்காமே
சித்தை யறியாத மானிடர்கள்
சிறந்த மஹரீபாக் கிட்டார்களே

கருவாய் சிற்றெனு ரூஹதிலே
காணும் வொளிவாகித் திரேகமெங்கும்
வருகும் பொறியினால் தாமரையாம்
வாச லைதற்குமே மூலைதன்னில்
பருகும் ருசியது இன்பமாகும்
பகரும் நிறமது வொளியுமாகும்
சருகி யினிவரும் இயல்பானதை
சாற்றக் கேளுமுன் மாற்றங்களே
நெருப்பி னால்வரும் பொறியானது
நிலைக்கும் பித்தான கசப்பதுவாம்
பருகும் நிறமது கறுப்பாகவும்
பகரும் வாசலுஞ் செவியாகுமே
உருப்பின் பொறியான காற்றானது
உவந்த நுரைசரல் புளிப்பாகவும்
தரிப்பின் நிறமது பச்சையாக
தங்கும் வாசலு மூக்காகுமே

தன்னின் பொறியது கருஈரலாம்
தங்கு மதின்ரசம் வுப்பாகவும்
மின்னும் நிறமது சிகப்பாகவும்
மீளும் வாசலுங் கண்ணுகுமே
மன்னும் பொறியது பல்க்சூத்தியாம்
மகிழு மதின்ரசம் துவப்பாகவும்
இன்ன மிதன் நிறம் வெள்ளையாக
இலங்கும் வாசலும் வாயாகுமே

வாயாந் துவாரத்தில் வருநரம்பு
வறைந்து கல்பெனுங் கடலைச்சுற்றி
நேயா மன்னீரல் தன்னிலாகி
நிலைக்கும் களமான நிதியானது
காயாங் கருஈரல் நரம்பெழுந்து
காணுந் தாமரைக் கடலைச்சுற்றி
ஓயா திருந்திடும் பஷருணதில்
ஒளியா யிலங்கிய ஐனுமாமே

கண்ணு நுரைஈர லிருந்தெழும்பும்
கலங்கு மனைக்கடல் தன்னிலாகி
மின்னு நாசியின் முனைபுரிந்து
மிளுஞ் சுவாசமும் வரும்வழியாம்
இன்னும் பித்தான நரம்பெழுந்து
இசைந்தது கூவான எழுத்தைசுற்றி
உன்னி யிருசெவி னடுவில்வந்து
உவந்து கேட்டிடும் உதூரியாமே

நாளும் கேள்வியோ டுறும்வாசியும்
நயனம் பார்வையும் பேச்சானதும்
கேளும் இதுநாலும் நால்வழியாம்
கிட்டும் நயம்பயம் வரவறிந்து
மூளும் பயமான விலக்கல்விட்டு
முடுகும் எவலை எடுத்துக்கொண்டு
ஆளு நாயனைத் தெரிசிப்பவர்
ஆடுங் கல்புல்லா அமுர்தமாமே

புல்லாங் குழலதைத் தானெடுத்து
புகழு வாசியில் புல்லையோட்டி
அல்லா வெனுநாம மதனைப்பூட்டி
அல்ஹம் தானதில் அறிவையூட்டி
சொல்லால் முழக்கமிட் டோலமிடும்
சுருதி தனைக்கண்டு சூழ்ச்சமதில்
வில்லாமல் வில்லும் வெளிதனிலே
விளங்குங் கல்புட விளக்கம்பாரே

கல்புக் கடலதைப் பார்க்கொண்ணாது
கயிறு லதையெடுத் தளக்கொண்ணாது
நல்இக் கரத்தினல் தொடக்கிட்டாது
நயக்கும் வாயினல் பேசொண்ணாது
பல்ந லத்தையும் இடறதையும்
பாரில் பரிமாரு பலனைத்தரும்
சொல்லும் களவுகள் புரியச்செய்யுஞ்
துனியா செயலெல்லாம் நாட்டமிதே

சொல்லும் பெரியோரைச் சிறியோராக்கும்
தொடரும் சிறியோரைப் பெரியோராக்கும்
நல்லோர் ஆலிமை ஜாஹிலாக்கும்
நாடுஞ் ஜாஹிலை ஆலிமாக்கும்
வெல்லும் இஸ்லாமைக் காபராக்கும்
விளங்கும் காபரை இஸ்லாமாக்கும்
எல்லா வகையெல்லாம் மனமாகவே
இலங்குங் கல்புட சூழ்ச்சிதானே

இந்த விதமான மனமதுவும்
இலங்கும் நமதுட விலாப்பாரினில்
அந்த விதமான மனமதுவை
அனைத்து யிபாதத்து செய்தவர்க்கு
சொந்த முஷாகிதா தன்னில்நபி
துணைய்ா யருள்செய்வார் துனியாவிலே
விந்தை யறிந்தவன் தனைவணங்க
மேலோன் சுவனத்தி னவனிலாமே

நாவா லொருமொழி கெட்டபேச்சு
நாடி யுரைத்திடும் வசனமது
தாவாஞ் சுவரொட்டி ஈரலதில்
தந்தி போல்சத்தந் தானுண்டாகும்
நோவா யிருந்திடும் இபுலீஸ்அவன்
நூறு மொழிகேட்டு அடுத்துவந்து
மூவா யிருந்திடுஞ் சுவரொட்டிமுன்
முடிகி வருமிருள் முறைதனையே
அடுத்துப் பிடித்தவன் பல்க்குத்தியின்
அமிர்த நரம்புதன் னூடுருவி
தொடுத்து வருமாங்காய்க் கீழ்புறத்தில்
தோன்றுந் துவாரத்தி லுள்ளடைத்து
படுத்து இருப்பானே மாபாவியும்
பகைகள் புரியவே பார்த்திருந்து
கெடுத்து வாயினல் வருவதெல்லாங்
கேடன் இபுலீஸ் வலைகளிதே
சுஜூதை யறியாத தோசிச்செயல்
துடரும் பெரியோரைக் கெடுத்தசெயல்
மஜிதில் தொழுவோரை மருட்டும்செயல்
மான பங்கங்கள் செய்யுஞ்செயல்
வசுவை யுகந்துநாம் வழிசருசி
வல்ல பெரியவன் வணக்கமிட்டு
பசுவை யிழந்திடுங் கன்றதுபோல்
பதறி யழுதிடும் பாவிநாமே
நன்மை யானது வாயினலே
நாவைப் பேணியே இருப்பதுவும்
பம்மி யிருபார்வை வருவதுவை
பார்த்து உஷாருக யிருப்பதுவும்
செம்மை யாகவே வாசிதன்னை
சிந்தா திறைபதம் சேர்ப்பதுவும்
வன்மை யாகவே யிருசெவியால்
வருகும் பவத்தினை யறுப்பதுவே

அரிது பகைதனை விரட்டிவிட்டால்
அசட னிபுலீஸ் மனம்வெருண்டு
வெருத்து இவனுட வுணவுவிட்டு
வெருண்டு ஓடுவான் வினையில்லாமல்
உருத்தா யிருக்கின்ற மனிதரிடம்
ஓடி யுறவாடி உரைகொடுத்து
கருத்தில் இருந்தவன் வழிகெடுத்து
கசட னவனுட தோழனென்பான்

தோழன் மாருக்கு அவன்முறிது
தொடுக்கும் வகைதனை சொல்லக்கேளும்
சால மாகவே அவன்மனதில்
சருகி பெருமையின் சங்கையாக்கி
கோல மாகவே பலஇன்பங்கள்
கொடுக்க இவன்மனங் குணங்கச்செய்து
கால காலமாங் கலிகாலத்தின்
கபடு புரியவே கரங்கொள்வானே

முன்னால் வருமாதை முகரச்செய்வான்
முடிகி யவளிடம் புணரச்செய்வான்
கன்னாஸ் கோளுகள் சொல்லச்சொல்வான்
கபடு சூதுபொய் களறச்செய்வான்
வண்ணான் கூலிக்கு வகையில்லென்பான்
வார்த்தி யார்பணம் வழியில்லென்பான்
தின்னான் மகளுக்குச் செலவுசெய்வான்
தீனின் வழியிட்ட தீனிவனே

தாயைக் கண்டாலுஞ் சனியனென்பான்
தமைய னிருந்தாலுஞ் சங்கைசெய்யான்
பேயைக் கண்டாலும் புணரச்செய்வான்
பிதாவைக் கண்டாலும் அதபுசெய்யான்
சேயைக் கண்டாலும் சிரமமென்பான்
செல்லத் தங்கையைச் ஜீனுவுக்கேய்ப்பான்
ஈயைக் கண்டாலும் எரிச்சலென்பான்
இன்ன மிவன்செய்யு மினிமைகேளே

வட்டிக்குக் காசு கொடுக்கச்செய்வான்
வருகும் எழியோரைக் கடிக்கச்செய்வான்
நட்டிக்கு ஞானம் படிக்கச்செய்வான்
ஞாய மானதை நலவிலென்பான்
செட்டிக்கு ரெம்பச் செலவுசெய்வான்
சேர்ந்த பந்தாரைச் சினந்துகொள்வான்
மட்டிக்கு ரெம்ப உதவிசெய்வான்
மனைவியால் மனம் மகிழ்கொள்வானே

அடுத்த வீட்டாரை யகலச்செய்வான்
அசலுவீட் டாரை அடுத்துவைப்பான்
தொடுத்த சண்டையைத் துணியச்செய்வான்
தோழன் மார்களைத் துணையாய்க்கொள்வான்
கொடுத்த இரணத்தைப் பரக்கத்தென்பான்
கூலி யாளரைச் சாலஞ்செய்வான்
விடுத்த தலாக்கினைப் பொருத்தமென்பான்
வேண்டும் இபுலீஸ் வினைகளிதே

இந்த விதமாக வருவதெல்லாம்
இனியன் இபுலீஸ் வுதிப்பாமென்றும்
அந்த பழிகாரன் வலைதப்பியே
அகன்று உஷாரெனும் அறிவினாலே
எந்த விதநன்மை பெறுவோமென்று
ஏக நாயனின் இணக்கங் கொண்டு
கந்த நபிமுறை வழியையன்றிக்
காணும் பொருளெல்லாங் கந்தையாமே

கந்தை யாகிய மந்தைவிட்டு
காணும் கடைத்தெரு போகுமுன்னே
விந்தை யாகிய கலிமாதன்னை
விளங்க விளங்கிடும் விளக்கொளிபோல்
பந்த மெரிந்திடும் குபிர்சிருக்கை
பார்த்து ஹலாலான பார்வையிலே
தொந்தந் தொந்தமென் றென்னுளுமே
தோற்றுப் பொருளதை தோற்றுவாயே

சொல்லும் வவன் யக்குல்லாயிலாஹா
சுருதி யில்லல்லா கூவானதை
அல்ப மற்றதின் பிலாதஹக்கின்
அருளும் பகுவவ காபிரென
வெல்லும் நபிமறை சொல்ப்படியே
வேத மறிந்திட வேணுங்கண்டாய்
அல்லும் பகலுமே யவனையன்றி
ஆகும் புகழது அமலாகுமோ

அருளாம் கலிமாவின் பனுபக்காவை
அறிந்து யிபாபத்துச் செய்வதற்கு
குரியர் லாயிலா ஹாவென்றதில்
கூடும் லாம்மொன்று அலிபாவொன்று
பிரியா லாஹெனுங் ஹேயாமொன்று
பேணும் இதுமூன்றும் பக்காவானதால்
தரிவா மற்றென்ப தெழுத்தானது
தவத்தில் தான்பனு தானனதே
களியாம் லாவுடன் அலிபானது
காணும் பக்காவாகி யிருப்பதினல்
வெளியா யிலேயென நபியென்றதால்
விளங்கும் யிலாஹெனு ஹேயானது
சுளியாய் பக்காவாய் தரிபாடென்று
சுத்த யிதுபாத்து வந்ததினல்
தெளிவாய் யில்லையென் றுண்டுமென்ற
திறந்த ஹேயினல் திறமானதே
அலகில் லாகுடன் ஹேயுங்கூடி
அனல்லா கூவென்ற அமலாச்சுது
சுலஹா பக்காவென்ற பேராமது
சொல்லமுடிவற்ற அதிகமென்றார்
நலமாய் அதிகமென் றுரைத்ததினல்
நாடு லாயிலா ஹாவானதில்
தலவாம் ஹேயது ஹாவென்றோங்கி
தரித்த இல்லல்லா கூவானதே

கூவாய் வெளியாகி எழுந்ததினால்
　　கோல மதில்மூன்று குணமாச்சுது
மாவா முஹமது றசூல்லில்லாஹி
　　மறையாம் பன்னிரண் டெழுத்தானதில்
நாவா முஹமதிற் கெழுத்து நான்கு
　　நாடு முதல்மீமும் ரெண்டாம்ஹேயுந்
தாவாந் தாலது நான்காவது
　　தனித்த இதுமூன்றும் பக்காவானதே

மூன்று மீமது பனுவானது
　　முதலில் அலிபாகி அசலைமாறி
மூன்றும் மருத்தயில் மீமாய்வந்த
　　முறையி லதுபனு முடிவாச்சுது
மூன்றும் மீமதை அசலில்லாக்கி
　　முன்னே அலிபதின் முகத்தைநோக்கி
மூன்றும் மீமதில் முன்மீமதை
　　முழக்க அதின்நாமம் அகமதாமே

அகம் தனில்வந்த மீமானதை
　　அழித்தால் அகதெனும் பொருளாச்சுது
தகும தாகிய அலிபிளந்து
　　தனித்த ரேயெனும் பேராச்சுது
பகும தாகிய ஹேயானது
　　பகரும் ஷீனெனும் வாருச்சுது
நிகும தாகிய தாலானது
　　நிறைந்த வாவான நிறமானதே

முன்னால் பனுவான மீமானது
　　முழங்கு லாமுமவ் வெழுத்துநான்கும்
பின்னால் றசூலெனு றசூலுமாகி
　　பிரியா ஹேஷீனு வாவுமாகி
தன்னு லிதுமூன்றும் பக்காவாகி
　　தனித்த லாமான மீமானது
சொன்னேன் பனுவென்று கலிமாவிலே
　　சூழ்ச்சி யறியவே சொல்லக்கேளாய்

அருளாங் கலிமாவில் லாயிலாகில்
அலரும் ஹேயது ஹாவானது
பொருளா யில்லல்லா கூவானதில்
புகழுங் ஹேயது கூவானது
கருவா முஹம்மது றசூலில்லாகில்
காணும் ஹேயது ஹீயானது
தருவா யிதுமூன்றும் வொன்றாகவே
தனித்து மறைத்திட்ட தவமிதுவே

ஹாவென் றெழுந்தது அலிபுமாகும்
கருவாம் கூவது வாவுமாகும்
ஹீயென் றெழுந்தது யேயுமாகும்
கிருபை இதுமூன்றும் இல்லத்துவாம்
நாவா இல்லத்து சுபாவம்மாறல்
நாடும் பத்குவின் லாவில்லம்மும்
தாவா யேயிக்கும் கசரதுவும்
தனித்த பாத்தியம் இருப்பதாலே

ஹாஹீ ஹூவது மூன்றாகவே
காணும் அவைகளின் அகமியமும்
வாகா நக்கத்ததில் நுக்கத்துயேழு
வந்து வளர்ந்ததே அலிபுக்குள்ளே
தாகா யாவரும் அறிவதற்கு
தகுந்த அலிபிலே நபியாகிய
சாகா லாம்வந்து கலந்தமையால்
சாரி வெளியாகி சலோபானதே

கடனும் அலிபுலாம் மீமானது
காணும் ஆஊசு வென்றெனவே
திடனாய் முழங்கிட மூன்றும்ஒன்றாய்
திரண்ட அலிபிலே மருதாபாகி
நடன மிடுலாமில் கலந்ததினால்
நபியை யும்மது இதுபாத்தையும்
தடமாம் பணவையும் பக்காவையும்
தனித்து ஒப்புக்கொண் டானதுவே

பாத்தி னென்பதில் பக்காவொன்பது
 பதினேந் தெழுத்தது பனுவானது
ஊத்தின் கலிமாவி லெழுத்துமொத்தம்
 உகந்த யிருபத்தி நாலானது
சாத்தும் நாலாறில் கணக்கெடுத்து
 சங்கை நபியதில் பேரொளிவாய்
காத்து யிருப்பாரே அவர்பதத்தை
 கண்டு அறியவே ஹலாலாகுமே

கலிமா இருபத்தி நான்கெழுத்தில்
 காணும் ஈராறில் கணக்கெடுத்து
தெளிவா யீராறை முப்பங்காக்கி
 தேடும் முப்பங்கில் இருபங்கிலே
ஒளிவாய் ஒருபங்கில் வேறெழுத்தில்
 உலக முழுதெங்கும் நிறைந்துநின்ற
வெளியாங் கலிமாவின் அலிபெழுத்தை
 வேண்டி யறியவே கடனாகுமே

அலிபா வெளியிலே ஒருகுறெழுந்து
 ஆன ஒருகுறிலே காற்றெழும்பி
நிலையா வாய்விலே அனல்யெழுந்து
 நிலைக்கும் வன்னியில் நீர்கசிந்து
ஒளியாம் அலையிலே அலைகள்மோதி
 ஓங்கும் அலையிலே நுரையுண்டாகி
சலியா நுரையினில் மண்ணுண்டாகி
 சாற்றுங் கலியினல் ஜகமானதே

ஞாமி லாகிய ரூமிஞரே
 கண்ணின் மணியான மஹரிபத்து
ஆமி ஞாம்மாள் பெற்றெடுத்த
 ஆல நபியுண்ட வாக்கியத்தை
பூமி தனிலுள்ள ஆணும்பெண்ணும்
 புதுமை யிதுவென்று மனதிலெண்ணி
சாமி யென்றொரு பக்கீர் வந்தால்
 சாஷ்டாங் கஞ்செய்து சங்கைகொள்வார்

அமலாஞ் செய்கான அமீரைத்தேடி
அதபு புரிவது அருமையாகும்
நவமாஞ் செய்கான நாதர்தனை
நாடி யறிவது நாட்டத்தாலே
தவமாம் மறைமொழி யுளத்திற்கொண்டு
தானே பேச்சுடன் மூச்சுமற்று
பவமாம் வருவினை முளையறுத்தும்
பழக்கம் புரிவது வணக்கமாமே

குருவால் வருமொழி திறமதாக்கி
குணத்தி லனுதினம் பழக்கமாக்கி
தருவார் நபியுரை சங்கையாக்கி
சருகும் வழிதனை நேரதாக்கி
சொருகுஞ் சரஹதை நெறியிலாக்கி
சுவனத் திறையவன் சுருதிநோக்கி
கருவாம் முன்னன்கின் மந்திரத்தை
காணும் பருளது கடனருமே

அருவா வரசெனுஞ் சிரசானதில்
அமர்ந்தே யொருசாவல் என்னேரமும்
குருசா முகம்வைத்து அழகாகவே
கூவுங் ஹூஹாஹி ஹூவெனவே
தரசாச் சாவலின் குணமதுவின்
சரத மறிந்துவுன் சாஸ்த்திரத்தில்
கருவாய் வரும்பெருஞ் சுருதிதன்னை
கண்டு அறியவே கடைத்தேறுமே

கடையாங் கடையது முடிவுமாகும்
காணும் எமனுடக் கயறுமாகும்
தடையாங் கடையதை மீள்வதற்கு
தகுந்த வஹதத்துல் வுஷூதுக்குள்ளே
நடையாய் வரும்பெரும் ஹாமில்தன்னை
நாடி யறிந்துவுன் நாட்டத்தாலே
குடைக ளிடும்மேக நபியிரசூல்
குருவின் மனந்தனைக் கொளுகுவாயே

முன்னே யுரைத்திடுங் கலிமாவிலே
மூன்று குணமென்று மொழிந்ததினால்
தன்னால் மம்தன அல்உஜூது
தனித்த காரண திரேகமென்றும்
பன்னுள் மறைவாமும் கினிலுஜூது
பகரும் சூழ்ச்சம திரேகமென்றும்
பின்னால் தோற்றுவா ஜிபுல்உஜூது
பிரியாஸ் தூலச் சரீரமமே

மூன்றும் மருத்கபா வாஹிதத்தில்
முழங்கு சிபத்தது தானெழுந்து
நீண்டாப் பொருளதாய் தானிருந்து
நீண்டிக் காரண திரேகம்வந்து
மீண்டே சூழ்ச்சம திரேகமதில்
மீண்டு வெளியாகி ஸ்தூலமதில்
பூண்டே யிருப்பதால் அசலைமாறி
புவியில் அடிமையின் புறம்பெற்றோமே

சிபத்தும் மஹாநபி வாஹிதத்தில்
சிறந்து வெளியான அறிவதுவே
தவத்தில் அஹியானின் தாபிதாவில்
தங்கும் அறிவதே இல்முமாகும்
எவற்றில் வெளியாக நாடினதே
இனிய நாட்டமே யிராதத்தாகும்
செபத்தில் நாட்டமெங் கொன்றுபட
செய்த சக்துவங் குதறத்தாமே

சத்துப் பரவவே வொன்றுபட
சார்ந்த பார்வையே பசருமாகும்
உற்ற பார்வையாங் குன்தொனியே
வுகந்து கேட்டதே ஜம்வுமாகும்
நத்துந் தொனியதைக் கேட்டுஅங்கு
நாடி யுறைத்ததே கலாமுமாகும்
பத்திப் பிடித்திடும் ஹயாத்ததுவை
பாதையறிவே சொல்லக்கேளாய்

கேளும் மஹாநவி யதனுடைய
கிருபைக் காரணங் கொண்டுண்டான
ஆளுஞ் சிபத்தது யேழுவுண்டு
அந்த சிபத்ததைத் தானறிந்து
மூளுங் கலிமாவில் தாசாபத்து
முதலாம் படிப்படி முறையறிந்து
ஆளும் இறைவன் மறையிற்சொன்ன
அறிவாம் சரிஹத்தில் அமருவாயே

அல்லா தான்சொன்ன னொருவாணிலே
அமலைக் கேளுங்கள் அறிவாகவே
நல்ல கலிமாவின் நடப்பறிந்து
நாடுந் தொழுகையின் வகைபுரிந்து
சொல்லு றமுலானின் நோம்பதனை
தொடர்ந்து சக்காத்து தான்கொடுத்து
வெல்லும் வயதுக்கோர் ஹச்சுவொன்று
விளங்க யிதுவைந்தும் பருளாகுமே

பருளாந் தொழுகையை அதபாகவே
பணிந்து உழுக்கொண்டு பரம்முன்னிலே
உருவாய் அஹமது அருவாய்வந்த
உயர்ந்த அறிதான மாணிக்கத்தை
மருளா மனதிலே திறமதாக்கி
மன்ன னிறைவனைக் குணத்திலாக்கி
கருவா யிருதயம் மலங்காமலே
கலங்கி தொழுகவே கடனுமென்றார்

தொழுகும் போதுவோய் பலஎண்ணங்கள்
தொடரு மதுவழி தொடாமலே
அழுது பழகியே இமாமுன்னிலே
அறிவா யறிவுக்குள் அறிவாகவே
பழுது வருகாமல் எனைக்காமென்று
படைத்தோன் பணிவிடை பணிந்துநின்று
உழுது பயிரிட்டு கதிரறுத்து
ஊட்டும் அமுதுபோல் உணர்விலாமே

இந்தவகைதன்னை யறியாமலும்
　　ஈமான் வழிதன்னைப் புரியாமலும்
சொந்தக் கலிமாவை விளங்காமலும்
　　சூழுந் தொழுகையைத் துடராமலும்
வந்த வழியினை அறியாமலும்
　　வானாள் போம்வேளை தெரியாமலும்
விந்தை யறியாத மனுடர்கட்கு
　　விபரம் மோதவே விளக்கமாமோ

விலக்க மில்லாத மனுவுடனும்
　　வேத மறியாத விகடனோடும்
கலக்க மில்லாத கபடனோடும்
　　கருவை யறியாத கசடனோடும்
துலக்க மில்லாத துடியனோடும்
　　சுருதி யறியாத தோஷியோடும்
புலக்கம் வையாமல் எனைக்காக்கின்ற
　　புதியோன் அடைக்கலம் புகுதஆமின்

---

## விருத்தம்.

முன்னுக்கு முன்னுமாகி முடிவில்லாப் பொருளுமாகி
தன்னுக்குள் தானுமாகி தனியமெய்ப் பொருளுமாகி
பின்னுக்குப் பின்னுமாகி பெருவெளி யொளிவுமாகி
வன்னியின் மலராய்வந்த வள்ளலைப் பணிகுவோமே

(வேறு)

வன்னிமலர் வாசத்தை முகக்கவேண்டி
　　வகுத்தானே யெனதுபிரான் வழியாய்கூண்டில்
பொன்னுமலர் பூசத்தை முகக்கவேண்டி
　　புகழுகிறேன் மெஞ்ஞான புகழைத்தூண்டி
நன்னயன மணிநடுவே கடந்துதாண்டி
　　நாடுமடா அச்சூழ்ச்சம் கருவாய்த்தோன்றி
உன்னுமலர் பூப்பறிக்க நாமும்வேண்டி
　　உரைத்தேனடா உண்மையுட னுறுதிதானே

உருமையதாய் கூவெழுத்தை யுளத்திற் கொண்டு
    உண்மையதாய் வாசிதனில் லுகந்துநின்று
கருதியிதை யோர்கட்டாய்க் கட்டிக்கொண்டு
    கமலத்தின் தாள்திறந்து கனியைக்கண்டு
மருகியிதை லாமலிபு வாலைமுண்டு
    மனமான முதுகதின்மேல் ஏறிக்கொண்டு
சொருகியிதை யோர்கட்டாய் கட்டிநின்றால்
    சொக்குமடா வாலையெனுந் துதிசொன்னேனே

சொன்னேனு னின்னமொரு செய்திகேளும்
    சொல்லுகிறேன் ஆயத்துக் குருசில்பாரும்
முன்னேனுரை அல்லைகயுல் லைஹய்லைமதீரும்
    முழக்கமதாய் லைஹயுமதை நினைவில்சாரும்
பின்னுவருங் கால்ரெண்டை யொன்றாய்சேரும்
    பிடித்திதனை வசபாக்கிப் பிணக்கியேறும்
பன்னுமொரு வொழுங்குடைய பலனைப்பாரும்
    பதமறிந்து சூழ்ச்சநிலை பணிந்துபாரே

சூச்சத்தி வின்னமொரு செய்திநானே
    சூட்டுகிறேன் இருசெவியின் காதில்லானே
பாச்சலினில் ஆதிவஸ்த்தை நெஞ்சில்தானே
    பக்தியேநீ யோகந்தனில் பழகிநீனே
வாச்சதென்று ஓங்காரக் குல்லில்மானே
    வைத்துவொரு மந்திரத்தை வசக்கிநீனே
ஆசார எமனுடைய ஊனைத்தானே
    அகண்டுவரும் நாதாந்த சுடரில்நீயே

சுடரதனில் நீயேறு நாடிநின்று
    சுத்திவந்து தமால்த்திறக்குங் கதவைக்கண்டு
அடர்ந்திருக்கும் ஆருதலம் அடுத்துச்சென்று
    அறிவான பரன்நந்தி யறையில்நின்று
படர்ந்திருக்கும் இருகலையும் வொன்றாய்க்கண்டு
    பலவழியு மொருவழியாய் பார்த்துச்சென்று
கடர்ந்திருக்கும் பச்சைமயி லேறிகொண்டால்
    கதவுதிறந் தருள்மாலைக் காணலாமே

காணுமே சங்குதொனி காதில்கேள்க்கும்
கடக டெனக் கின்னெரியுங் கருத்தால்நோக்கும்
தோணுகின்ற வச்சிரமணி விளக்குந் தோற்றும்
தொண்ணூற்றி யாறுதத்துவம் மற்றுப்போகும்
பூணுமே நந்தியுட புவனில்லாகும்
புகழாக ஐந்தெழுத்தும் பூராய்வாய்க்கும்
வேணுமே இப்புதுமைக் கண்டால்தாயார்
வேண்டியே வருகுவாள்தன் முன்னாலே

வருகுவாள் முன்னாலே வயிரம்பூண்டு
வகையான ஆபரனம் தானுமுண்டு
கருவான அவளுரு தானுமீண்டு
கர்த்தாவின் வுக்கிரவின் கணையுமாண்டு
தருவாளே நல்வாக்கு பெறுகவின்று
தந்திடுவாள் அன்னேரம் தயவாய்நின்று
குருவாலே இவ்வாக்கு பெற்றோமானால்
குவலயத்தில் மாசற்ற குணந்தானுமே

தானென்ற ஆசையது அற்றுப்போகும்
தான்செய்த பவமெல்லாம் தானேபோகும்
தீனென்ற ஆசையது திறமேயாகும்
தீதில்லா மாமரமு விளைவதாகும்
கோனென்ற ஆசையது குடியேயாகும்
குவலயத்தில் தீன்குலத்தின் குணமேவாழும்
ஜானென்ற போதும் மறைந்தேபோகும்
சர்க்குணமாம் வாலையடி சாந்தமாமே

---

## கிளிவாலைக் கண்ணிகள்.

கட்டபோம்மு—வர்ணமெட்டு.

---

ஆதியா யெங்கு நிறைந்தவளே
அனாதியாய் அங்கு மறைந்தவளே
சோதியா யெங்குஞ் சுரந்தவளே
சூழ்ச்சத்தைக் காட்டாயோ ஓகிளியே. 1

வாலை வடிவே வளர்பிறையே
வந்திடும் மாமதி ஞபகியே
பாலனன் காதிர்மு கையத்தீனின்
பாவம் பொருத்திட ஓகிளியே 2

சிற்றெனு நூராய்ச் சிறந்தவளே
ஷீமெனும் பேமீமாய்ச் சேர்ந்தவளே
கற்றறிவில் இஸ்மில் லஹாலமதாய்க்
காண அரிதான ஓகிளியே 3

குற்றங் களற்ற குணமயிலே
குண்பயக் கூன்குடி கொண்டவளே
நற்றவ முற்ற நவமணியே
நாட்டத்தி லாவாயே ஓகிளியே 4

ஆல முழுதும் நிறைந்தவளே
ஆலியி லேகுடி கொண்டவளே
ஓலமிடு வேதச் சோலையிலே
ஓமென்று ஆளாயோ ஓகிளியே 5

மாடப் பிறுவடி வானவளே
மாசோடி காலமாய் நின்றவளே
தேடக்கி டையாத தேவரமே
தேற்றலைச் சொல்லுவா யோகிளியே 6

ஆவென்ற சொல்லி லமைந்தவளே
ஆகூக்கு மஹாசூக்காய் வந்தவளே
காவேரிப் பட்டணம் ஆண்டவளே
காருண்யந் தந்திடு மேகிளியே 7

யெக்கின் மாமா யிருந்தவளே
எங்கும் பராபர மானவளே
ஹக்க ஞெளிவில் கலந்தவளே
கண்ணியந் தந்திடு வாய்கிளியே 8

நாட்டுக்கு நாயக மானவளே
நாலா றெழுத்தினில் நின்றவளே
கூட்டுக்குள் சென்றுநான் கூவயிலே
கோபங்கள் செய்யாதே ஓகிளியே 9

பத்து வயது பருவமல்லோ
பாரேழும் வானேழுந் பாதமல்லோ
சித்துவ யதைநான் காண்பதற்குச்
சேவடி பணிந்தே னேகிளியே 10

பத்து வயதி லுமைப்பணிந்து
பாஞ்சாலம் போக மனநினைந்து
சித்திலெ முத்துவைக் காண்பதற்குச்
சிந்தையில் பாடுறேன் ஓகிளியே 11

பாடியே நிஷ்ட்டைகள் செய்கையிலே
பாதம் பணிந்தும்மை நாடயிலே
ஓடிய மாய்கைப் பிடாரிவந்து
ஒக்கோலம் போடுதே ஓகிளியே 12

பொல்லாத மாய்கைப் பிறவியிதோ
போக்குக்கு அஞ்சாத பூதமிதோ
கல்லாத நெஞ்சக் கருவிதுவோ
களவி லானனே ஓகிளியே 13

களவி லாகியே பேருங்கெட்டேன்
கபடு சூதுபொய்க் காணத்தொட்டேன்
புளைின் வாவிப் பொரியில்கஞ்சா
புறத்தி லானனே ஓகிளியே 14

கஞ்சா அபினும் கலந்துஉண்டேன்
காமாட்டி யாருடன் கலந்துநின்றேன்
அஞ்சா மனத்தின் அழகைஉண்டேன்
அய்யோ வென்செய்வேன் ஓகிளியே 15

கெட்டுக் கெட்டுநான் பேருங்கெட்டேன்
கேவல மாதரின் கேடுந்தொட்டேன்
பட்டுப் பட்டேன் பரத்தைவிட்டேன்
பாவி களிற்பாவி யோகிளியே 16

பாவி யென்றிடும் நாமமிட்டு
பாரினி லேயுந்தன் பாதந்தொட்டு
ஆவியி லேநின்று கூவயிலே
நாவலர் ஓதிறு ரேகிளியே 17

கூவினன் நித்திரை செய்கையிலே
குன்றென்ற வினைகள் போடயிலே
காவி யுடுத்தி ஒருவர்வந்து
கவிதை சொன்னாரே ஒகிளியே 18

ஒன்றுக்கு மஞ்சா தென்றெனவே
உற்றது சொல்கிறேன் கேளெனவே
திண்டிக்கு முண்டுசெய் யாதெனவே
செப்பினர் செப்பினா ரேகிளியே 19

செப்பிய வாசகந் தன்னைக்கண்டு
சீரிய வீரியந் தானும்விட்டு
ஒப்பில்லா மூட ருறவைவிட்டு
உண்மைப் பணிந்தேனே ஒகிளியே 20

சத்துசிக் கானந்த வீட்டுக்குள்ளே
சங்கை பொருந்துந் தயாபரியே
பக்தியே யெத்தனை யாளுதற்குன்
சத்தியந் தாராயே ஒகிளியே 21

சத்தியங் கூறிய சண்டாளன்
பக்தியங் கூறிய தொண்டாளன்
மத்திப தீப மணிப்பிருவை
சத்தியே பாரேனோ ஒகிளியே 22

மிஞ்சியே யஞ்சியு மைப்பணிந்தேன்
தஞ்சமென் றுந்தனைக் கெஞ்சிவந்தேன்
கெஞ்சி யிருளை விலக்கிஉந்தன்
பஞ்சறை சேர்ப்பாயே ஒகிளியே 23

பஞ்சறை பொல்லாத வஞ்சகர்கள்
நெஞ்சாறப் பொய்தனைச் சொல்லிடுவார்
அஞ்சாளர் தன்னையே நம்பிநின்றால்
பஞ்சாலம் போவேனோ ஒகிளியே 24

பஞ்சாலன் நாட்டுக்குப் போனவர்கள்
பாதை வழியங்கு மீண்டதில்லை
அஞ்சாளர் பொல்லா தகமுடையார்
ஆருக்கும் அஞ்சாரே ஒகிளியே 25

திண்டுக்கு முண்டுகள் செய்திடுவார்
தில்லுமுள் ளால்மொழி சொல்லிடுவார்
பெண்டுக்கு ரெண்டகம் பேசிடுவார்
பேயரில் போயபா மோகிளியே 26

சண்டாளர் நாட்டுக்குப் போகவேணும்
ஜாதிக் குதிரைமேல் ஏறவேணும்
உண்டான வண்டரைக் கொல்லவேணும்
உத்தாரந் தாருமே ஓகிளியே 27

உத்தாரமாகிய கோட்டைக் குள்ளே
ஒட்டைய பொன்பது பேருக்குள்ளே
வித்தாரம் பேசிநான் போவேணுனல்
வெஞ்சனம் வைப்பாரே ஓகிளியே 28

ஆங்கார வீர னொருவனுண்டும்
ஆசை தாசல்தாரன் னொருவனுண்டும்
தாங்கார வீம னொருவனுண்டும்
தர்க்கங்கள் செய்வானே ஓகிளியே 29

வஞ்சிப் பத்த னொருவனுண்டும்
வல்லப் பிரட்ட னொருவனுண்டும்
நஞ்சு பித்தன் னொருவனுண்டும்
நாமத்தைச் சொல்வேனே ஓ கிளியே 30

மடமட்டிக் கோள னொருவனுண்டும்
மன்மத பான னொருவனுண்டும்
இடந்தட்டிப் பாச னொருவனுண்டும்
இடறு செய்வானே ஓகிளியே 31

ஊருத் தலைவனால் பேருமுண்டும்
உற்ற தலைவ ரனேகமுண்டும்
போருத் தலைவரை பேருமுண்டும்
பொல்லாப்புச் செய்வாரோ ஓகிளியே 32

கொள்ளி தலைவனால் பேருமுண்டும்
கோமுட்டிக் கோப னொருவனுண்டும்
தெள்ளி யிவர்களைக் கொள்ளைகொள்ள
சீக்கிரம் செல்கிறேன் ஓகிளியே 33

போகும்வழிக்கி பொருளுமில்லை
போனு லுங்கைக்குத் துணையுமில்லை
ஆகும்வழிக்கு நானுன்னை நம்பி
அஞ்சாலம் போகிறே ஞேகிளியே 34

துணைக்கு வைராக்கிய தூதுவேணும்
துப்பாக்கிக் குண்டுகள் தானுவேணும்
பிணக்கி யுன்னுட பேரும்வேணும்
பேதங்க ளில்லாம லோகிளியே 35

ஆரண மாலை யணியவேணும்
ஆங்காரக் கோபத்தை தாக்கவேணும்
காரண வாளை யெடுக்கவேணும்
கண்டந் துண்டமா மோகிளியே 36

பச்சைக் கச்சை யணியவேணும்
பவள முத்தைப் பணியவேணும்
இச்சைக் கொச்சை யறுக்கவேணும்
இல்லென்ற வாவியில் லோகிளியே 37

பொல்லாத இச்சைப் புலனுடையார்
புறம்பொய் சூது புகழுடையார்
கல்லாத இச்சை கருத்துடையார்
கருத்தைச் சொல்லுவோ மோகிளியே 38

நாட்டுப் பெருமைகள் பேசிடுவார்
நானென்ற ஆண்மையை வீசிடுவார்
காட்டு பரதேசி போலிருப்பார்
காரண மில்லாரே ஓகிளியே 39

இந்த வீரரை வெல்லுதற்கு
ஏறும் பரியம்பு வாளுமில்லை
சொந்த வீரரை வெல்லுதற்கு
சோபனஞ் சூடுமே ஓகிளியே 40

கூடவென்று பேசுங் கூரலெடுத்து
குருநின்ற வேதக் குகையடுத்து
யாவென்ற சொல்லை யகந் தொடுத்து
அரட்டி வெட்டுவே ஞேகிளியே 41

வெட்டுவேன் வெட்டின வெட்டுக்குள்ளே
வெட்டி யெட்டிமனம் வெட்டயிலே
பட்டன வீரர்கள் என்னை வந்து
படையாய்ச் சூழ்ந்தாரே ஒகிளியே 42

சூழ்ந்து எந்தனைச் சுற்றிக்கொண்டார்
சொக்குப் பொடிதன்னை தூவிவிட்டார்
தாழ்த்தி யெந்தனை தாக்கிநின்றார்
தந்தவினை யிதோ ஒகிளியே 43

கருப்பு பட்டாளம் மெத்தவுளோ
காலேறிப் பட்டாளம் மெத்தவுளோ
குரும்பு பட்டாளம் மெத்தவுளோ
கூவி வளையுதே ஒகிளியே 44

வந்த விதியோ வரும்விதியோ
வல்லை ஞாலேவரும் விதியோ
முந்தும் விதியோ முதல்விதியோ
மூதா விதியோ ஒகிளியே 45

எந்தன் விதியைநீ நீக்கவேணும்
ஏகன் பதியி லிருக்கவேணும்
உந்தன் பதத்தை யுவக்கவேணும்
ஓமென்ற சொல்லிலே ஒகிளியே 46

ஏழு ரேகைகள் கொண்டவளே
ஏழு லகையும் ஆண்டவளே
ஏழு தோற்ற மிருந்தவளே
என்துயர் பாராயோ ஒகிளியே 47

பாஞ்சாலன் நாட்டுக்கு போகவேணும்
பாலென்ற கோட்டைத் தாக்கவேணும்
அஞ்சாலர் வீட்டுக்குள் ளாலேசென்று
அம்பலம் பாடுவே னொகிளியே 48

வல்லோ னருளால் உமதருளால்
வந்த படைகளை யானும்வென்று
சொல்லாமல் சொல்விடுஞ் சூழ்ச்சியதை
தொட்டுநீ காட்டாயோ ஒகிளியே 49

நாடு கடந்து நகர்கடந்து
நாலாறு ரோட்டும் தான்கடந்து
காடு கடந்து கலைகடந்து
காவேரி போகிறேன் ஒகிளியே 50

காட்டுக்குள் காலேறி போகையிலே
கலையொரு மான்அங்கு ஓடயிலே
சூட்டுக்கோல் சூதனைத் தானெடுத்து
சூடு போட்டேனே ஒகிளியே 51

பாட்டுக் கடங்காத ரோட்டினிலே
பாதை வழியங்கு போகையிலே
ஒட்டையர் ஒன்பது பேரும் வந்து
ஒளிந்தி ருந்தாரே ஒகிளியே 52

மலிந்து நின்றவர் தன்னைக்கண்டு
மயங்கி டாமலே முன்னில்சென்று
குளிர்ந்த பேச்சுகள் பேசிக்கொண்டு
குடிகெ டுத்தேனே ஒகிளியே 53

கெட்டதும் பட்டதும் கேடாச்சு
கேடு கெட்டதும் வீணாச்சு
பட்டதும் கெட்டதும் பாழாச்சு
பாஞ்சாலம் போகிறேன் ஒகிளியே 54

செல்கிறேன் செல்கிறேன் மாமணியே
சிங்கார பாஞ்சாலம் பட்டணமே
சொல்கிற மாமணிச் சோலையிலே
சூதுகள் மெத்தவோ ஒகிளியே 55

குண்ணென்ற அம்புரு தானெடுத்து
கூவென்ற வில்லில் குறிப்பெடுத்து
கண்ணென்ற வில்தனைக் கைபிடித்து
காட்டியே செல்கிறேன் ஒகிளியே 56

செல்லும னக்குடி பொய்கையிலே
சிங்கார மானசெவ் வைகையிலே
வெல்லும் மனக்குடி தன்னில்சென்று
வீரியம் காட்டேனே ஒகிளியே 57

வீரியம் காட்டியே நிற்கையிலே
வேங்கைப் புலியொன்று வேகமதாய்
கூரிய ஆங்கார ஓசையுடன்
கூவி வருகுதே ஓகிளியே 58

பேசிடும் வேங்கையை வெல்வதற்கு
பேச்சினால் கிட்டுமோ பேரழகே
ஆசிமா நன்நபி தன்பொருட்டால்
வாசியி லேறுவே ஞேகிளியே 59

வாசிப் பரியில் வளதேறி
வந்திடும் மாய்கை வழிமாறி
மாசில்லா தேசியை யான்கோரி
மங்களம் பாடுவே ஞேகிளியே 60

பாடிய சங்கீதப் பாட்டுக்குள்ளே
பாலாய் வடியிதென் வீட்டுக்குள்ளே
தேடிய இங்கித நாட்டுக்குள்ளே
தீன் முழங்குதே ஓகிளியே 61

ஆசை முழங்கு அகலதிலே
பாசை முழங்கும் பகையதிலே
பூசை முழங்கும் புகழதிலே
வாசந் துலங்க வருங்கிளியே 62

புரியில் நின்று நிறைந்தவளே
பொரியில் நின்று மறைந்தவளே
அறிவுக் குள்ளறி வானவளே
ஆதி பராபரந் தான்வாழி 63

மக்க முஹம்மதர் தான்வாழி
மன்னவர் நால்வர்கள் தான்வாழி
ஹக்க னருள்பெற்ற ஹசனுசனின்
கமல பாத மலர்வாழி 64

திக்கிலோர் போற்றிடும் பாத்திமுத்து
செல்வ வழிவருஞ் சீர்முஹையதீன்
பக்கத்துணைவராம் அப்துல்காதிர்
பாத கமல மலர்வாழி 65

நாடெங்கும் போற்றிடும் நல்லமீரான்
நாகூர் பதிவாழும் யெந்தன்பிரான்
பாடல் சிறந்திடும் காதிரொளி
பாத கமல மலர்வாழி 66

அபிராம் பட்டணம் அதிபதியாம்
ஆருக்கு மஞ்சா அருந்துதியாம்
சபுறுஞ் செய்குபு தாவுதொலி
சரண கமல மலர்வாழி 67

கூறும் அபிராமில் வாழுமஸ்தான்
குங்கும நெய்னர் முஹமத்சுல்தான்
தேருங் காதிர்மு ஹையதீன்மஸ்தான்
தினமும் பாடிச்சிந் தைமகிழ்ந்தான் 68

---

## விருத்தம்.

ஆமாவெனுங் கலிமாவதை யறிவாலறிந் துணர்ந்து
ஈமானெனுங் கனியானதை இடமுந்தருள் புரிந்து
ஊவாவெனும் இஸ்லாமதை உகந்தேயதில் புகுந்து
காமாவெனும் மணியானதை கண்டு அறிவோமே

---

## நோண்டிச் சிந்து.

தந்தின தின தினனு தினனு
தனதினந் தனதினந் தனதினனு (தந்தி)

ஈமா னாறிந்து அதினுட
இஸ்லா மைந்துட் பொருளறிந்து
கோமா னருளுகந்து நமது
குற்றம் பொறுக்கவே அடிபணிவோம (தந்தி)

ஆமந்து பில்லாஹி எனும்பொருள்
அல்லா வொருவனென்று உள்ளமகிழ்ந்து
அவனன்றி வேறேயொரு கெதிகள்
ஆருமில்லையென்றவனை நாடியிருப்போம் (தந்தி)

தன்னில் தானுனேன் அவன்தன்
தாயுந்தந் தையுமில்லா தரமானேன்
முன்னில் முன்னுனேன் நடுவு
பின்னுக்கு பின்னுமுள்ள பெரியோனுன் (தந்தி)

பூர்வீக மானவனே எவைக்கும்
பூணு முவமையொப்பு தானில்லானே
சீருஞ் சிறப்பவனே யாவர்க்குஞ்
செய்யுஞ்செய் யாததற்குச் செயலவனே (தந்தி)

நாவன்றி பேச்சுமுள்ளோன் அவனுக்கொரு
நாடு மூக்கன்றிமூச்சு நாமமுள்ளோன்
பூவன்றி வாசமுள்ளோன் அவனே
பூமிவா னமுழுதும் புகழுடையோன் (தந்தி)

கண்ணன்றி பார்வையுள்ளோன் அவனுக்கொரு
காணும் உதரண்டிக் கேள்வியுள்ளோன்
பெண்ணன்றி ஆணுமில்லான் அவனொரு
பேரும்யிரப்பிறப்பு பேருமில்லான் (தந்தி)

## மலக்குகளை அறிவது.

அமலா மலாயிகத்தின் எனும்பொருள்
ஆன மலக்குகளின் தானமுஞ்சொல்வேன்
தவத்தில் மிகுந்தோரென்றும் அவர்கள்
தாயுந்தந் தையுமில்லா தருமரென்றோம் (தந்தி)

வல்லோன் மலக்குகளில் மெத்த
வரிசைமிகவும்பெற்ற வரமுடையார்
எல்லா மலக்குகள்க்கும் மேலாய்
யேகவ னொளிவினில் இலங்கவந்தோர் (தந்தி)

அந்த மலக்கினிலோர் நாமம்
ஆருஞ் சொல்வதற்கு வீரமுண்டோ
சொந்த உருவமுண்டோ அவர்தன்
சூழ்ச்சத்தை சொல்வதற்கு நேச்சருண்டோ (தந்தி)

அவர்தன் வளவினிலே வல்லோன்
அனைத்தையும் தான்படைத்து அவர்வளவில்

அவனிடு நோட்டமதை அவரில்
ஆக்கிஞ ஞக்கைதனில் போக்கறவே (தந்தி)

அந்த மலக்கவரின் நாமம்
அருளும் அவ்வல்அக்குளு மக்ளுக்கென்பார்
சொந்த இலாஹிஎன்பார் பின்னும்
சொல்லும லாயிகத்தின் றூஹூவென்பார் (தந்தி)

றூஹில் அஹூலமென்பார் இன்னும்
நூதன மானநூரு முஹமதென்பார்
றூஹூல் யில்முஎன்பார் பின்னும்
றூஹூ ஹக்கானிஅம்ரு ரூஹூவென்பார் (தந்தி)

இந்த மலக்கினுட பெருமையை
எடுத்து உரைப்பதற்கு எவருமுண்டோ
விந்தைகொள் நாவுமுண்டோ அவரின்
விதத்தை யுரைப்பதற்கு பதட்டமுண்டோ (தந்தி)

கரையில்லா சமுத்திரமே மற்றக்
காணுமலக் குக்கெல்லாங் கருவளமே
குறையில்லா மாணிக்கமே அவரைக்
குடிகொண்ட பேர்க்கெல்லாங் குதுபினமே (தந்தி)

அந்த மலக்கில்நின்றே சிபுரிஹில்
அதிபர் மண்ணுக்குதண்ணீர் மீக்காயில்
சொந்த மலக்கில் நின்றே இசுறாபில்
சூரு நெருப்புக்கிசு றாயிளென்றோம் (தந்தி)

நாலுநால் காளானர் இந்த
நாடெங்கும் பேருமிக தானனர்
வாழும் புலனனர் அவர்கள்
வாவை அறிந்தவற்கு உறவானர் (தந்தி)

## வேதங்களை அறிவது.

நவமா ஒக்குத்துபிஹி யெனும் பொருள்
நாயன் இரக்கும்வேதந் தூயதென்றும்
தவமா யறிந்தோர்கள் மேலோன்
தவமுறு நவநிலே தளமுறுவார் (தந்தி)

வந்த வேதமதே அம்மகிமை
வளர்ப்பத்தைச் சொல்லுகிறேன் கலைமகளே
சொந்த வேதமதே உஷாதாய்ச்
சூழ்ந்து சுழன்றுவருங் காந்தமிதே (தந்தி)

கண்டு அறிவோமே அவுஷாது
கடந்து வருகுந்தடந் தெரிவோமே
உண்டு அறிவோமே கண்டால்
உண்மை இதுவோவென்று உரைப்போமே (தந்தி)

துவக்க முடிவில்வரும் நடுவுந்
தூண்டா மணிவிளக்காய் தூண்டவரும்
பவங்களறுக்கவரும் அதது
பதவி யறிந்தவற்கு உதவிதரும் தந்தி)

## நபிமார்களை அறிவது.

சொல்வேன் ஒருசுளிகி யெனும்பொருள்
துய்ய நபிகளுட துறைகளதை
வில்வேன் பிறையவனின் தூதாய்
விளங்கும் வேதக்கருவை துலங்கவந்தோர் (தந்தி)

ஆதம் வழிவழியாய் எங்கள்
அருமை முஹம்மதரின் அவர்வரையாய்
வேதங் கடைமுடிவாய் எவற்கும்
விளங்கவே மார்க்கவழி துலக்கவந்தோர் (தந்தி)

எல்லா நபிகளுக்கும் மேலாய்
எற்ற மிகவுமுள்ள ஹாத்திமுள்ளே
பொல்லாக் குபிரதுவை களைய
புருக்கான் மறைநெறியை யுரைக்கவந்தோர் (தந்தி)

அாஷில் சிரசுடையார் அவர்பதம்
அவனி தருத்தராவில் அமைப்புடையார்
குருஷில் முகமுடையார் திரேகம்
குங்கும வாசமனக் குணமுடையார் (தந்தி)

பாதந் தரையில்படார் எவரும்
பார்த்திடக் கூடாத பலனுடையார்

காதங் கமழுடையார் முன்பின்—
காணும் பொருளுடைய கருத்துடையார் (தங்கி)
ஊத்தச் சடலமில்லார் உடலில்
ஊரும்வலஞ்சலங்கள் யாதுமில்லார்
எற்ற துயிலணியார் அவர்தன்
ஏக னுடனேமொழி எதுருடையார் (தங்கி)

## கியாமமுடிவை அறிவது

இன்னு ஓல்யௌமில் லாகிர்காளே
எழுப்புவதுமது துவர்க்கமென்றும்
மின்னுங் கியாமத்துக்கு கடைசி
மீண்டிடுந் தீர்மான மேதுவென்றோம் (தங்கி)
கூறும் வொல்க்கதிரி யெனும்பொருள்
கொல்லும் நலமிடறுங் கோனருளே
பூரும் மனந்தனிலே அறிந்தோர்
புகழ்ச்சியாய் சுவனத்தின் மகிழ்ச்சியென்றோம் (தங்கி)

## மிசுலாத்தில் ஐந்து காரியம்.

மீளு மிசுலாத்தில் முதல்கலிமா
மேலவன் பொருளெனுஞ் சாலறிவோம்
வாழும் லாயிலாஹா யில்லல்லா
வந்தகூ கலிமாவின் விந்தையறிவோம் (தங்கி)
தேறு மனதினிலே கலிமாவை
தினந்தினஞ் சுகித்திட தினமறிவோம்
ஆரும் இந்தப்பொருளை மனதில்
அறிவது தன்னை நீக்கி அனுதினமே (தங்கி)
தன்னைப் பனுவாக்கி தொழுகையில்
தனியவன் குணங்கொண்டு தனித்துநின்று
முன்னவன் தனைநோக்கி இமாமுடன்
முதலவன் தொழுகையை முடித்திடுவோம் (தங்கி)
போற்றும் சக்காத்துவழி ஹக்குகல்க்கு
வேற்றுமை தன்னைநீக்கி விரைவுடனே

நூற்றுக்கு ரெண்டரைமேல் கணக்குகள்
பார்த்து யெழியவர்க்கு சாற்றிடுவோம் (தந்தி)
மாற்றந் தனைவிலக்கி நமது
மனதில் வருஹவா தனையொடுக்கி
சாற்றும் ரமுலானில் முப்பது
சங்கை நோம்புகள்வைத்து பங்கம்விடுவோம் (தந்தி)
ஏறும்வாகனமும் செலவுக்கு
ஈயும் பொருளுந் துகையிருக்குமாகில்
கூறுமக் காவில்சென்று ஹச்சு
கொள்வதுங் காதிர்முகைய்தீன் சொல்விதமே (தந்தி)

# வேத மெஞ்ஞான மஞ்சரி

## விருத்தம்.

தன்னையினி தனையறிய தடமுங் காணேன்
தலவன்வருந் தலமறியுத் தவமுங் காணேன்
என்னையினி இன்னதென இடமுங் காணேன்
ஈரெழுத்தி லோரெழுத்தின் இருப்புங் காணேன்
முன்னவனின் அடிநடுவின் முடிவுங் காணேன்
முத்திதரு வேதாந்த முனையுங் காணேன்
தன்னவனை என்னுளத்தில் காண்பதற்கு
தனியவனே யுன்கிருபை தந்தாழ் வாயே

காவா சரஸ்பதி—என்ற மெட்டு.

பல்லவி.

வாவா என்நாதனே வாவா என் நாதனே
வந்தாளு வாயென்கோனே ஆ—நீ (வாவா)
ஜீவாதி ஜீவனே ஜீவப்ர காசனே
சிந்தாது சிந்தையில் சொந்தமுடன் நீ (வாவா)

ஹாதியுஞதியாய் கருவது ஆதியாய்
ஜோதியுஞ் சுருதியாய் சூல்ச்சவெளியுமாய் (வாவா)

அண்டமும்பிண்டமாய் அடங்களுமேகமாய்
கொண்டயெவ்வுயிருமாய் கூஹாகூவுமாய் (வாவா)

ஆதமே போதமாய் ஐம்புலன்வேதமாய்
நாதமே பூதமாய் நாம்வந்தவழியுமாய் (வாவா)

---

நமது நபிநாயகம் அவர்கள்மேல் பாடிய நற்கவிகள்.

## விருத்தம்.

இருளுக்குள் இருளாய் இருண்ட அமாவாசி இரவுதனில்
கருவுக்குள் கருவாய் கதிரிட்டெழுந்த கதிரவன்போல்
திருவுக்குள் திருவாய் திரிண்டெழுந்த பூரணமாய் சிறக்கயெங்கும்
பொருளுக்குள் பொருளாய் வரும் முஹமதுபாதம் புகழுவோமே

கந்தா காருண்யனே—என்ற மெட்டு.

பல்லவி

வருவார் வருவாரோடி நபிநாதரடி (வருவார்)

அனுபல்லவி.

கருமுகிர்குடை யிடுபவர்பெரு காரணக்கடலானவர்
தருமமுநெறி தயவுசாதரி சத்தியபூபதிதவதுதி (வருவார்)
அரஷினில்சிர சணிந்தவர வமரரொடுநடைநடந்தவர்
குருசினில்முக கொளுகிநின்றவர் கோதிலாக்குருவானவர்நபி(வரு)
கீந்தில்வடிவம்புரிந் தவரவர் கிருபையினிலுரைத்தவர்
சாந்தகுணமு ஆழ்ந்தமனமு தேர்ந்தவுனவோருரு நபி (வரு)
பாதந்தரையில் படாதவர் நம்மைபாது கார்த்திடவந்தவர்
ஆதவழிவழி அமரோர்புகழ்மணி வேதமாமணி விலைநபி (வரு)
காரிடியடி தொனியடி சிருகாதிர்முஹையதீன் கவியடி
தேருமறையதிளுரு அதிபதி தேவர்புகழுந்தீனநபி (வருவார்)

---

பண்டித மோதிலால்நேரை பறிகொடுத்தோமே—என்ற மெட்டு

பல்லவி

சங்கையுள்ள எங்கள்நபி சரணந் தேடுவோம்
சரணந்தேடுவோம் நம்மள் சலுகை காட்டுவோம்
சஞ்சலமெல்லா மகத்தும் சஞ்சீ நபியே (சங்கை)

அனுபல்லவி.

திங்கள்தனிலே பிறந்தார் தீங்குகளை ஏமறந்தார்
அங்கமெல்லாங் குங்குமமணம் அமைந்திட வந்தார்
அமைந்திடவந்தார் ஆதி அமுர்தமு முண்டார்
ஆருமற்ற பாவிகட்கு தீரமுந் தந்தார் (சங்கை)

பட்டமரந் தளிரசெய்தார் பால்கிணறை ஊறச்செய்தார்
நட்டுவைத்த புத்துருவை நாடிடச் செய்தார்
நாடிடச் செய்தார் கலிமா ஓதிடச்செய்தார்
நம்பினோர்க் கருள்புரியு அம்பிகா வானோர் (சங்கை)

அரவந்தனை யழைத்தார் ஐங்கலிமா தனைவிடுத்தார்
குறவர்மகள் தன்னைமனங் கொண்டுமுடித்தார்
கொண்டு முடித்தார் புகழ் கண்டுநடித்தார்
கோமானருள் பெற்றுவந்த சீமானென்பிரான் (சங்கை)

ஏகன் அரிஷில்சென்றார் எதிர்த்து மொழியுவிண்டார்
மோகன்கா திர்முஹையதீன் தாகமுங்கண்டார்
தாகமுங் கண்டார் என் ஆகமுநின்றார்
அண்டினோர் கருள்புரியு மென்று நின்றுமே (சங்கை)

பல்லவி.

எங்கே தேடுவேன் எங்கள் நபியை எங்கே தேடுவேன்

அனுபல்லவி.

எங்குநான் தேடுவேன் எவ்விதம் நாடுவேன்
அங்கத்தி லோடிநான் அரும்புகழ் பாடியே (எங்)
சாலைமரப் பிள்ளைகளா சரணவப கிள்ளைகளா
சோலைமர பிள்ளைகளா சுகநபியை கண்டீர்களா (எங்)



வண்ணமயில் ரூபிகளா வள்ளருவிக் குருவிகளா
புன்மைஒயில் ரூபிகளா பொன்நபியை கண்டீர்களா (எங்)
தூக்கனத்தின் குருவிகளா தூங்குவௌவால் தூதினங்கா
மாக்கனக் குருவிகளா மாநபியை கண்டீர்களா (எங்)
கொக்குகுல குருவிகளா குயில்மயில் குலமினங்கா
பக்குவக்கா திர்முஹையதின் பாநபியை கண்டீர்களா (எங்)



நமது நாயக முகையதீன் அப்துல்காதிர்ஒளி அவர்கள்மேல் பாடிய நற்கீர்த்தனைகள்.

விருத்தம்.

தொட்டிடு பேட்டில் நூராய் துளங்கிய ஐனுக்குள்ளே
கட்டிடு அலிபின் நூராய் கலந்திடு வட்டத்துள்ளே
முட்டிடு அடிநடுவில் முடிவெனு முடிவுக்குள்ளே
கிட்டிடுங் கௌது அகுலம் கிருபை கண்டிரஞ்சுவோமே.

பல்லவி.

வருவார் வருவாரோடியே யெங்கள் முகையதீன்
வருவார் வருவாரோடியே

அனுபல்லவி.

கருமா நெரியதுவுண்டோர் தாத்து சிபாத்ததில்நின்றோர்
அருமாமறைதனை யுண்டோர் அமரோர் புகழுரவந்தோர்

முடுகு

அரும்புகழ் சிரந்திலங் கிருவிழி பொளிகதிர்
ரணிமதி முகவசி கரமோடு வருமறை
யுரமிரு கரவரை யொளிரழ குலமுறை
நரைகமல் மணம்புணர் நமன்வலை யறுத்தவர்
நற்றிசை யெங்கினு நற்புகழ் கொண்டவர்
நத்தியமத்தியில் பத்தியங் கொண்டவர்
சத்தியருகினில் சமரசம் புரிந்தவர்
சரிநா கதையுமிர் ஜலத்தினில வித்தவர்

பற்றில்லா வீரரை வெட்டிவதைத்தவர்
பண்பிலா தேவதை வம்பை யொடித்தவர்
குற்றுள்ள நக்கத்தினில் குருவடி வெடுத்தவர்
குமரியி னறையினி லமுர்தங்கள் வடித்தவர்
குங்கு மலர்ப்புய மெங்கும் பிரகாசம்
குலமுரு வலம்புரி சிலம்பர தேசம்
அங்க முழுதினும் அம்பர்பிர காசம்
ஆ ஈ ஊவென்றடங்கிய பூசம்
அழிவில்லா மணியவர் அமரர்கள் புகழ்வினர்
அஹமது வழியினர் அருங்கதி பெருகினர்
பழுதில்லா பரமினர் பரகதி தருமனர்
பவனியாம் அவனியில் பல்வினை தீர்ப்பவர்
பத்திடும் பேய்பிடி வஞ்சனை சூனியம்
பல்வினை நோய்பிடி பராக்கிரம் பயமடி
சுத்திடு மயமடி மாய வலையடி
சூரா வழிக்கெடு மாறு தகத்தொடு
குத்திப் பிடித்திடுங் கோதையின் வாதையும்
குடலைப் பிடிங்கிடு அடமெனு மடமையும்
நத்திப் பிடித்திடும் முத்திய காசமும்
நாடிய வாய்பொடு நானென்ற ஆண்மையும்
நம்பின பேர்களுக் கம்பு கொடுத்திடும்
நவரத்ன மேடையில் தவமது பலித்திடும்
வம்பிய நோயெல்லாம் வெம்பியே ஓடிடும்
வல்லவர் முகைய்யதீன் சொல்லைநாம் சொல்லிடில்
வாக்குப் பெருகலாம் ஓடி தினந்தினமும்
வஞ்ச மருகலாம் பாடி (வருவா)



பகதூர் பகவத்சிங்கம்—என்ற மெட்டு.

பல்லவி.

ஹாதி ஹாதிவழி அப்துல் காதிறொளி (ஹா)

அனுபல்லவி.

ஆதிமாமணி அமரோர் புகழ்வணி
ஜாதி மாமணி சருவம் நீ
ஜோதி மாமணி சுவனத்ததிபதி
சொல்லு யாமு கையதீன்

தொகையறு.

எள்ளுக்குள் ளெழுகடலே உள்ளுக் கடக்கியே
யிருத்திவிளை யாடவல்லோர்
யிருகலையு வொருகலை யாகப் பொருத்தியே
யிணைத்துவிளை யாடவல்லோர்
சொல்லுக்கு ளெழுகடலே சொல்லி லடக்கியே
சுருக்கிவிளை யாடவல்லோர்
சுருதிமறை யெங்கினு வருதிகுறை யாமலே
சூழவிளை யாடவல்லோர்
முல்லுக்கு லெழுகடலே முனையி லொடிக்கியே
முறுக்கிவிளை யாடவல்லோர்
முத்திதரு வேதாந்த மத்திவிழி மீதிலே
முங்கிவிளை யாடவல்லோர்
தில்லுக்குள் ளெழுகடலே தில்லி லடிக்கியே
திரிகோண மாடும் வல்லோர்
தேவாதி தேவர்கள் வந்துமது பாதாரம்
தேடி விளையாட வல்லோர்

பாட்டு.

திருவே திருமணியே யெங்கள் தேவர்கனியே
கருமா மறைவடிவே பெரும் கடைமுடிவே

சரணம்.

திருவின் வாவியில் திகழ் பரவிடும்
தேவ ராகிய நாதரே
மருவி யென்மன முருகிவாடுது
மன்னர் யாமு கையதீன்

பல்லவி.

அருமுகனே அருள் தரும் வதனா
அடியேனுக் கருள்தர வரும் மனனா

அனுபல்லவி.

அற்புத ஜோஜர ஜெம்ஜெத சோபன
ஆகம யோகமுனா (அருமுகனா)

சரணம்.

குருமுகனா அமரோர் குணதனா
குங்கும மலர்ப்புய குலமகனா
குணகுண மாமன மாவன மானுவ
கோனவ தீனுகனா (அருமுகனா)
திகழ்பரனா அருள் செய்யுங்கருணா யென்
சிந்தையி லருள்தரும் ஜெயமிதனா
சிற்றுயிர் மீமுமெய் தீனிலையானதில்
சிற்றிஸ் மானதில் யா (அருமுகனா)
உணர் வடிவே உயிர்க்குயிர் துணையே
உற்றவர்க் கருள்தரும் உண்மைக்கருவே
உள்ளமை யானவு சூதுமுன் வாவுயிர்
உத்தம தானதில் யா (அருமுகனா)

---

அடைக்கலமே—என்ற மெட்டு.

பல்லவி.

அடைக்கலமே அடைக்கலமே
அடைக்கலம் அடைக்கலம் அடக்கம் ஹக்கில்

அனுபல்லவி.

மடத்தலை கொக்குவின் மாயமாய் தூக்குமுன்
கடைத்தலை யைக்கண்டு கண்டு ஹக்கினில் (அடை)

காட்டானை மீதேறி கடைத்தெரு போகுமுன்
நாட்டான் எமனை வென்று நாடு ஹக்கில் (அடை)

காட்டுப்புலி வந்து கருவை யழிக்கமுன்
வீட்டுப் புலியைவென்று விரிவாங் ஹக்கில் (அடை)

சேட்டைக் குரங்கது சேட்டையி லாகுமுன்
பாட்டில்க் காதிர் முகைதீன் பாடும் ஹக்கில் (அடை)



## வாலை சரஸ்வதியின் துதி.

விருத்தம்.

ஓயாது ஒலியாது ஒருவர்க்கு மெட்டாது உண்மை யமிர்தம்
காயாது பூவாது கணியாது மறையாது கர்ப்பகத்தில்
தேயாது தீயாது திருடுதற்கு எட்டாத தெய்வசக்தி
சாயாதுமாயாதுமாயத்தில்மீளாத சத்தியின்பாதம் பணிவோம்

பல்லவி.

வாலை சரஸ்பதி தாயே வந்
தாளுவாய் யென்னை நீயே

அனுபல்லவி.

மூலமாங்குளத்தில் முளைத்திடு மணியே
பாலன் ஏழைமுன் பாடும் கவியில் (வாலை)
தாமரைக்குளத்தில் தங்கியமணியே
மாமறை தனிலே சோபனமொடுவா (வாலை)
ஐணெனுங் குளத்தில் அமர்ந்த கண்மணியே
ஹைனெனுங் ஹையில் ஹையுமாகவே (வாலை)
ஆலமுழுதினு அடங்கிடா மணியே
பாலன் காதிரு முகைதீன் பாடலில் (வாலை)

---

குதம்பா—என்ற மெட்டு.

பல்லவி.

அவனன்றி வோர்அணு அசையாதென் றிருப்போர்க்கு
உபதேசம் யேதுக்கடி என் அம்மா
உபதேசம் யேதுக்கடி
எல்லா மவனென்று எண்ணி யிருப்போர்க்கு
பொல்லாப்பு யேதுக்கடி என் அம்மா
பொல்லாப்பு யேதுக்கடி

நித்த மனுத்திய நிலையறிந் தோர்க்கு
உத்தியம் மேதுக்கடி என் அம்மா
உத்திய மேதுக்கடி
மவுத்தின் ஹயாத்தின் மகிமை யறிந்தோர்க்கு
தவத்துகள் யேதுக்கடி என் அம்மா
தவத்துகள் யேதுக்கடி
ஹக்குகல்க்கு வொன்றாய் கலந்து யிருப்போர்க்கு
சக்குகள் யேதுக்கடி என் அம்மா
சக்குகள் யேதுக்கடி
மாவினில் வாசம் மணந்து யிருப்போர்க்கு
பூமணம் யேதுக்கடி என் அம்மா
பூமணம் யேதுக்கடி
பூவினில் வாசம் பொருந்தி யிருப்போர்க்கு
சாவது யேதுக்கடி என் அம்மா
சாவது யேதுக்கடி
சாகாமல் செத்து சருகாய் வுணந்தோர்க்கு
யோகமு மேதுக்கடி என் அம்மா
யோகமு மேதுக்கடி
சொல்லாமல் சொல்லி சுஹூது செய்வோர்க்கு
சல்லாப மேதுக்கடி என் அம்மா
சல்லாப மேதுக்கடி
பொல்லாப்பை விட்டு புவியாசை விட்டோர்க்கு
கல்லாப்பு யேதுக்கடி என் அம்மா
கல்லாப்பு யேதுக்கடி
பாட்டில் காதிர் முகைதீன் பாடல் அறிந்தோர்க்கு
கோட்டங்கள் யேதுக்கடி என் அம்மா
கோட்டங்கள் யேதுக்கடி

---

ஐந்துவயதினிலே—என்ற மெட்டு.

பத்து வயதினிலே பருவப் பிராயத்திலே
குத்துளே கூடினேண்டி கிளியே
கோலமனப் பொய்கையிலே

குத்தா நுக்கத்தினிலே கூவாய் மறைந்துநின்ற
சித்திலே கூடினேண்டி கிளியே
சிந்தைமனப் பொய்கையிலே

தொட்ட குறையறியேன் தொடுகுறி நானறியேன்
விட்டதோர் குறையினிலே கிளியே
வேதமனப் பொய் கையிலே

வஞ்ச மரமறியேன் வல்வினைக் கொம்பறியேன்
பஞ்சமா மறளியிலே கிளியே
பாடுமனப் பொய்கையிலே

பூசைக் களமறியேன் பூக்குமலர் தெரியேன்
வாசமா மலரினிலே கிளியே
வந்தமனப் பொய்கையிலே

பற்றற்ற விடமறியேன் பாடும் பொருளறியேன்
உற்றவன் காதிர்முகையதின் கிளியே
உண்மைமனப் பொய்கையிலே

---

மஹமதியர் குலத்தில் மாணிக்கமாய் விளங்கும்—என்றமெட்டு.

பல்லவி.

ஆஷிக்கெனுங் கடலில் ஓசை முளங்கிநின்ற
அறிவினுக் கென்னசொல்லுவேன் என் னம்மம்மா
அறிவினுக் கென்னசொல்லுவேன்

முடுகு

அத்து விதப்பொரு ளுத்த விடத்தில்
பத்து விதக்கரு முத்த மடத்தில்
அறுமுகந் தன்னைநாடியே அதனில்வாழும்
குருமுகந் தன்னைத் தேடியே

ஓசையெனும் பிஸ்கில் வாசங் கமழ்ந்துநின்ற
உண்மையை யறிகிலேனே என்னம்மம்மா
உண்மையை யறிகிலேனே

ஒத்த எழுத்தினி லுத்த கருத்தில்
முத்துக் குடத்தினி லற்ற விடத்தில்

ஒன்பது வாசல்தானே அதைப்பொருத்த
அன்பது ஒன்றுந்தானே

வாசங்க மழ்ந்துநின்ற நேச மஹா ருக்கினில்
பாச மகற்றுவேனே என் னம்மம்மா
பாச மகற்று வேனே

பத்து எழுத்தி னிளுத்த விதத்தில்
முத்துக் குடத்தி னிழுத்த அகத்தினில்
பாரும்பரம சித்தையே தினந்தினமும்
கூறும்பரம வித்தையே

முன்னாள் கூரிருளி லன்னாள் வெளியாகிவந்து
முத்திரை அறிகிலேனே என்னம்மம்மா
முத்திரை அறிகிலேனே

முத்தே முதல்மணி முதலே நவமணி
சித்தன் காதிர் முகைய்ய தீனணி (ஆஷி)

---

பல்லவி.

ஆஹா யிதென்ன பெருமை அறிவின்திறமை (ஆஹா)

அனுபல்லவி.

சாகாத காலிலேறி சாயுட்ச்ய பதம்நாடி
சரிகம பதநித தகுதிகு தனன
தத்திமித் தோம்திமி தாம்தரி தினண (ஆஹா)

சரணம்.

பாயாத கொம்புரெண்டும் பாய்ந்து வருகுதடி
பத்திரு காலொடு பலரொளிர் நடையாய்
நித்தமனுத்திய நிலைதனி லுடையாய் (ஆஹா)

ஆசைக் கடல்பெருகி அனலாய் உருகுதடி
அதிலொரு மாமணி அமுர்தத்தை வடிக்க
துதிதரு மாமணி சோபனம் படிக்க (ஆஹா)

மோசக் கடல்பெருகி மோகத்தி லானதடி
முற்றிலுங் காதிர்மு கைய்யதீன் சொல்படி
நத்தியென் னுளுமுன் நாட்டத்தி லடினடி. (ஆஹா)

எங்களது திருநாடு—என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

வருகுதடி வருகுதடி யெந்தன் கிளிமானே
வந்த கவிமாவதனை வசக்கி நின்றேன் நானே
உந்தன்வழி யெந்தவழி வந்தவழி கண்டு (வரு)
வந்தவழி அந்தரத்தே யுந்தன் விழிகொண்டு
இருகாலில் குஞ்சங்கட்டி இருந்துவிளையாடி
இருமனது ஒருமனதாய் இருந்து கவிபாடி (வரு)
கூடுவிட்டு கூடுபாயுங் கோலமதைக் கண்டு
கூவுக்குள்ளே குடிபுகுந்து கோட்டையுநான்கடந்து (வரு)
சாட்டையில்லாப் பம்பரம்போல் சாதுவிளையாடி
சமஸ்தான வாலயத்தில் சங்குதனை ஊதி (வரு)
ஊதிவரும் சங்குக்குள்ளே உகந்து கவிபாடி
உற்றவன்கா திர்முகைதீன் அகம்புரமுநாடி (வரு)



விருத்தம்.

தலைப்பிள்ளை சூலெடுத்து தாமரைக்குளத்தில் வைத்து
முலைப்பிள்ளை பாலினாலே முத்தியே சுத்திசெய்து
குலப்பிள்ளை தன்னைக்கண்டு குறியுடன் பணிந்தோமாகில்
கிளிப்பிள்ளை போல்முன்பேசுங் கிருபைக்கண் ஐனிலாமே

பல்லவி.

காணாத கண்என்னகண் யிதைக்
கண்டறியார் மனம் புண்

அனுபல்லவி.

தோணாத கண்ணுக்கு தோற்றுக்கண்பத் துண்டும்
வீணான கண்ணுக்கு வேதமுண்டோ சொல்லும் (கா)
பச்சைக்கண் ணென்றுண்டும் பவளக்கண்ணென் றுண்டும்
பிச்சைக்கண் ணென்றுண்டும் யிசை யறியாமலே (கா)
சொல்லுங்கண் ணென்றுண்டும் சொல்லாக்கண்ணென்றுண்டும்
இல்லுக்கண் ணென்றுண்டும் யிடமறி யாமலே (கா)

மனதுக்கண் ணென்றுண்டும் மனுமின்கண்ணென் றுண்டும்
சினத்துக்கண் ணென்றுண்டும் சிவமறியாமலே (கா)

ஆசைக்கண் ணென்றுண்டும் அறிவுக்கண்ணென் றுண்டும்
பாசக்கண் ணென்றுண்டும் பதமறியாமலே (கா)

உச்சிக்கண் ணென்றுண்டும் உமிரிக்கண் ணென்றுண்டும்
பக்ஷன்கா திர்முகைதீன் பதமறியாமலே (கா)

---

## விருத்தம்.

அரும்பொருள் சாத்வீகத்தில் அமர்ந்தநற் குணமுண்டாகி
வருமொரு யிராசதத்தில் வந்திடுமாய் கைபொங்கி
தருமொரு தமோகுணத்தில் தங்கிடும் தர்ம கர்மம்
வரமது பெருகிவந்த வாசியை யறிகுவோமே.

## ஆனந்தக் களிப்பு.

வருகுதடி வளர்கின்ற வாசி அந்த
வளர்ப்பத்தை சொல்லுகிறேன் கலக்கமர தோசி (வரு)

பிரியுகின்ற மூலமதிலிருந்து பெரும்
பிசலான அக்கினி கொண்டனலா யெரிந்து
அறிவுக்கு ளுருவாக யெழுந்து உந்தன்
அண்டமது பிண்டமென் மண்டலங் கடந்து (வரு)

அலிபுலாம் மீமான வேதம் அது
ஆருக்கு அடங்காது ஐஞன போதம்
கலிமாவில் ஹலான ஆதம் பாதங்
கண்டறியார் மணங்கலங்கு மெப்போதும் (வரு)

கௌதெனுங் கோட்டையடி மேலே பெருங்
காரணம் முளங்குதடி காபுநூனலே
தௌரெனுஞ் சுவர்க்கங்கள் போலே அங்கு
தங்கு முகைய்யதீன் தவநிலையுள்ளாலே (வரு)

நூனை காபுக்குள் நூரு உள்ள
நுக்கத்தான நூனுக்குள் மறைவான காபு
தீனை பேர்கொண்ட நூறு அது
தீயாது ஒயாது திருவருளின் தூது (வரு)

தூதுக்குள் தூதான சூது அது
சொல்லவு வொண்ணாது துடாராயிப்போது
சாதுக்குள் சாதான சாது அதை
சற்றும ரக்காமல் நித்தமெப் போதும் (வரு)

பூவினில் வாசவரும் போலே கலிமா
பொங்கு மெங்கெங்கும் புகழ்தங்கு புகழாலே
மாமறை மலர்வாசம்போலே சொல்லு
மதியமூர்தங் காதிர்முகையயதீன் னூலே (வரு)

---

லாவணி—வர்ண மெட்டு.

பல்லவி.

எட்டுச்சா னுள்ளஒரு கட்டட வீட்டுக்குள்ளே
இருக்குது தெப்பக்குளமே அதற்கு வாசல்
விருக்குது நாலுபுறமே அதிலொரு மாது
யெதுரே வாராவின்னேரமே
மாது அழகினை நான் மண்ணிலெடுத்துரைக்க
மனது வருகுதில்லையே அவளுட கோலம்
மாரி உறைக்க தொல்லையே அவளுட ஜாலம்
கூறி உறைக்கவில்லையே
தூரில்லா குடமதை தூக்கியிடுப்பில் வைத்து
மாரி வருகும்போதிலே அதிலொருமானும்
தேரிவருகுநாளிலே அதிலொரு வேடன்
ஏரி வருகுங்காலிலே
ஓடிமான் குட்டிமரைந் தோடிவருகும் போது
நாடியே எமனும் வந்தான் அம்பையெடுத்து
சாடியே அம்பை விடுத்தான் அதனுயிரு
சாகவே வம்பாய் தொடுத்தான்
சாகவேபங்கு நாலாய் போகவேமண்ணு மண்ணாய்
சாற்றுநீர் நீறுமாச்சே காற்றுடன் காற்று
காணவே பேருமாச்சு நெருப்பும் நெருப்பாய்
கண்டிட வொன்று மாச்சே
தூரில்லாகுட மென்றேன் துய்யவோர் மாதுவென்றேன்

மாரிலா குடந்தனிலே றாஹூ றாஹானி
தேரிய வடந்தனிலே தினந் தினமும்
கூறி குலாவு தனியே
சோலைக்கு யிலினங்கள் கூவும்அபி ராமினில்
சொல்லுங் காதிர்முகைய்யதீன் சொகுசா யங்கு
சொன்னேன் கவிகளுள்ளதில் அதையறிந்து
சோபனம் பெரு இன்னுளில்

---

## விருத்தம்.

அந்தணர் புகழும்யோக அடவியி லமரர்யாகந்
தந்திடும் புகழும்யோக சதுர்மறை ஞானம்யாக
இந்திரர் புகழும்யோக இமையவர் வாழுமோக
மந்திரர் நந்தியாவட்டம் மறைதனை பார்க்கலாமே.

### பல்லவி.

நந்தா வனத்தைப் பாரடி நாதர்கள்வாழும்
நந்தா மணத்தைப் பாரடி

### அனுபல்லவி.

கந்தா மலர்கள் சூழும் கமலப்பதியில் நாலும்
சந்தாபந் தன்னைதீர்க்கும் தருமறை யுறைப்படி (நந்)

### சரணம்.

சூரியர்கள் வாழுமடம் சோபனங்கள் போடுமிடம்
வீரியம் விளங்குமடம் வேதமனம் யெந்தன்வனம் (நந்)

சந்திரன் புகழுமடம் சருவமுமடங்கு மிடம்
இந்திரர் புகழுமடம் யெந்தன்மனம் சொந்தவனம் (நந்)

வானவர்கள் சூழுமடம் வாத்தியங்கள் போடுமிடம்
ஞானவர்கள் பாடுமடம் நந்திமனம் யெந்தன்வனம் (நந்)

ஓலமிடு வேதமடம் ஓதிவரும் நாதனிடம்
பாலன் காதிர்முகைதீன் பாடும் கவியின்வனம் (நந்)

---

### பல்லவி

அதோ வருகுதொருமான் அதை
அறியாதிருப்பதென்னகான்

அனுபல்லவி.

சதா தினம்தினமு சஞ்சரிக்குமெந் தன்மான்
சகலமனு வோர்தேர் சாற்றுமறை நின்றமான்
சிதா சிதம்பரத்தில் சித்துவிளை யாடுமான்
செல்வம் சிறக்கயெங்கு கல்பிளுறைந்து அங்கு (அதோ)

நந்தியிலே குந்திநின்று நாடி விளையாடுமான்
நமோ நமோ நமோவென்று நமசிவாயம் போடுமான்
சிந்தையிலே குந்திநின்று செப்புஉபகாரமான்
சிந்தாது சிந்தைதனில் தொந்தாவி தொந்தமென்று (அதோ)

கொம்புரெண்டு வொன்றதாய் கூடிவிளையாடுமான்
கூ கூவென்ற வாவியில் குவிந்திருந்து பாடுமான்
தும்பமற்றணுவியில் துடித்திருந்து வாழுமான்
தூண்டாமணி விளக்காய் தூண்டிவிளை யாடியங்கு (அதோ)

இருகால் சிலம்புட னிருந்துவிளை யாடுமான்
யீராரு கலையினிலேற்றிரக்கம் போடுமான்
திருகால் நடையொடு தேவரொடு பாடுமான்
தித்திக்கும்கா திர்முகைதீன் மத்திக் கிடைநடுவே (அதோ)

---

பல்லவி

வட்டமிட்ட பொட்டிலொரு மான்வந்தது வுண்டோ
வந்தமானுதன்னை யிங்கு கண்டதுமுண்டோ

அனுபல்லவி.

கண்டதுமுண்டோ அம்மா கண்டதுமுண்டோ
கட்டுப்படா எட்டில்நாலை கட்டின துண்டோ (வட்ட)

சரணம்

எட்டுநாலு மூக்குகுத்தியேகி வந்ததே
ஏழுரண்டு வாசலில் இரங்கி நின்றதே
கட்டுபடா எட்டிலேகடுகி நின்றதே
கட்டுப்பட்ட நாலைவிணாய் காலமிட்டதே அம்மா
காலமிட்டதே பெருஞ்சாலம் தொட்டதே (வட்ட)

மாசில்லா மறையினோடு மருகிநின்றதே
மறையுமானு ஒருதுறை நீர் மதியிலுண்டதே
காசில்லாத கலையினோடு கடுகிவந்ததே
கட்டுப்படா யெட்டில் நாலை கட்டிக்கொண்டதே அம்மா
கட்டிக்கொண்டதே மான் பட்டுக் கொண்டதே (வட்ட)

காட்டில்வளர் வேடர்தன்னைக் கண்டு வோடியே
கலங்கிமனது வாடியெந்தன் கண்ணில் கூடியே
வாட்டமுற்று தேட்டம்முற்று வாசி யேறியே
வந்த பணிரெண்டிலே வசைந்து பாடியே அம்மா
வசைந்து பாடியேகவி யிசைந்து நாடியே (வட்ட)

கூவுலே குலாவியே குருவடி தேடி
கொண்டயேமன் தன்னைவிட்டு குக்கவி பாடி
மாவுலே மறைந்தகவி மாவதைத் தேடி
மங்களம்கா திர்முகைய்தீன் தினம் பாடி
தீன்தினம்பாடி யெந்தன் சிருமானைத் தேடி (வட்ட)

---

## விருத்தம்.

பொல்லாத புள்ளிமான் புலனின்மான் பொறியின்மான்
புகழுதற்கு யெட்டாத புண்ணியமான்
கல்லாத கல்விமான் கருவின்மான் கமரிமான்
காணுதற்கு எட்டாத கருவுளம்மான்
சொல்லாமல் சொல்லுமான் யெந்தன்மான் சொந்தமான்
சொல்லுதற்கு எட்டாத துய்யமான்
விள்ளாமல் விள்ளுமான் யெந்தன்மான் குட்டியை
விரைவினில் கண்ட தெவரோ

பல்லவி

கண்டதுண்டுமோ யெந்தன் மான்குட்டியை
கண்டதுண்டுமோ

அனுபல்லவி.

அண்டரிடமிருந்து அவனிதனிலே வந்து
வண்டன் தனமிருந்து வாழுமான் குட்டியை (கண்ட)

பற்றற்ற எல்லைதனில் பளிங்கிபோலே யிருந்து
பற்றுற்ற எல்லையில் பதருமான் குட்டியை (கண்ட)
பரதேசியாகவந்து பரமன்தனை மறந்து
இரவள்த் துன்யாவைநம்பி எங்குமான்குட்டியை (கண்ட)
பாசம்தனி லுழன்று வேசந் தனைமரந்து
தாசன் காதிர்முகைதீன் தனதின்மான்குட்டியை (கண்ட)

---

ஞானபண்டித மோதிலால்—என்ற வர்ண மெட்டு.

பல்லவி.

ஓங்கார வேட்டையாடுவோம் தீங்காரம்விட்டு
ஓங்கார வேட்டையாடுவோம்

அனுபல்லவி

ஆங்காரம் கொண்டுமே தூங்காமல்த்தூங்கியே
அதிசொருபயாக மாக ஆனந்தயோக (ஓங்)

சரணம்.

பாங்கா வனத்திலே பாசக் குளத்திலே
நீங்காமனத்திலே நிலையா வனத்தில் (ஓங்)

தோகையரு.

ஞானமௌனக்குடி ஞான மௌனத்திலே
ஞான நாதனையும்கண்டே
நானென்ற ராணுவந் தானென்றவீமனை
நானல்லவென்று கண்டே
வீனென்ற எமனின் சானென்ற பேரையும்
வினையற விடமுங் கண்டே
விரிவிட் டெழுந்திடு வரிவேங்கை யாமமுதை
விரியணன் தனையுங் கண்டே
ஆணொடு பெண்ணிலா மாணின்ற குட்டியை
அன்போடு தானுங்கண்டே
அசையாத ஒருமணி அசையாதிருக்குது
அசைந்துவரத் தானுங்கண்டே

தீனோடு தீனதாய் தீன்தீன் முகம் மதாய்
தீனுக்குள் தீனைக் கண்டே
திகழ்பர்வு மெஞ்ஞான ஞானமறை நூல்தனை
தீதர திரமுங்கண்டே

(பாட்டு)

திரமதுபெருவாய் தீதுகளருவாய்
தினம் தினம்வரமது பெருகவே (ஓங்)

---

விருத்தம்.

தாத்ததுவே செபாததுவாய் தரளமது
மஞகருவாய் தரணியெங்கும்
பூத்ததுவே புகழதுவாய் புகழ்க்குடையோன்
புகளோனும் புகழவொன்று
காத்ததுவே ஆத்துமத்தின் முடிவுதனைக்
கண்டறியக் கலங்கி நெஞ்சம்
கோர்த்ததுவே ஐனடுவில் ஐனெளிவாய்த்
துலங்கு மந்த குதுசி தானே.

---

மேரே மேளலாபுலா—என்றமெட்டு.

பல்லவி.

குதுஷே குதுபே ருஜா
கோமான் மகமத் பாக்ஷா (குது)

தொகையறு.

துகியாறாகு அகுலமேயா துற்றத்துல் பைலாவிலேயா
கதியாங் கலக்கல் யின்ஞ்சா னேயா காணுஅலா சூரத்திலயா

(பாட்டு)

காணும் ஆதம்பாதம் கைராணவேதம் (குது)

(தொகையறு)

கலக்கல் இன்ஞ்சான் அலாசூரத்தே கலிபா ஆதம் கைராமதே
துலக்கஇன்ஞ்சான் அலாநூரதே கல்பாரஹே அம்ருஹே (கு)

(பாட்டு)

ஹக்கை ஹல்க்கில்க் காண்பாய்
கல்கை ஹககில்க் காண்பாய் (குதுஷே)

றாகுறாஹே ஜிஸ்மானியா றாகுறாஹே சுப்ஹானியா
றாகுறாஹே றாஹானியா றாகுஅகுலம் றாகுயா
(பாட்டு)
தோற்றும் றாஹே ஜலால்
தோற்றும் றாஹே ஜமால்
(தொகையறு.)
சுழியாம்வட்டச் சுழியிலேயா சுடராம் குதுபுசூழ்ச்சிலேயாம்
தெளிவாம்ஒளிவில்லுஜூதில்லேயாம்தேடுங்காதிர்முகைதீன்யா
(பாட்டு)
திவ்ய திருமறையே தேவர் புகழுரையே (குதுவே)



விருத்தம்.

நன்மையு மழிந்துபோகும் நலமது அழிந்துபோகும்
தின்மையு மழிந்துபோகும் திரமெல்லா மழிந்தேபோகும்
உண்மையா முப்பால்க்கப்பால் உகந்தமெய்ப் பொருளைக்கண்டு
தன்மையாலிக் காவைக்கொண்டால் தவமது அழிந்திடாதே.

பல்லவி.

கலிமா மாவிலடி கரைசேர்வோம் வாடி (கலி)

அனுபல்லவி.

புலிமா மாமரடி புகழ்ந்தாரே கோடி (கலி)

தோகையறு.

மத்தான மத்திலே மத்துக்குள் சத்தாகி மனநினைவு வொன்றுமாகி
சித்தான சித்திலே சித்துக்குள் முத்தாகி சிவசத்தி தானுமாகி
பத்தான பத்திலே பத்திரு காலாகி பரமன்கலி மாவுமாகி
வித்தானவித்திலே வேதமேதானாகிவிளங்கவரும் வேதாந்தமே (கலி)

நூனான நூனிலே நுக்தெனும்பேராகி நாறான நாறுமாகி
தானான அலிபிலே தவளமே மணியாகி தானதே தானுமாகி
தீனான தீனிலே தீன்முகம் மதுவாகி தீதில்லா திருவுமாகி
நீனாகி கானாகி யெவ்வுயர்க் குயிராகி நின்றபர மானந்தமே (கலிமா)

மாயனா னிபுலீஸ் ஓதா மந்திர மதனைக்கண்டு
காயாத மாமரம் மீதேறி சென்றங்கு கனியைக்கொண்டு

தேயாதுரு யீமான் யிசுலா மதுவதைத் தினமுகந்து
பாயாமல் பாய்ந்து பரமானந்தம் பெருவாய் நற்பாக்கியமே (கவி)
எட்டாதகனியொன்றிருக்குதுயென்னிலேஎட்டிறுயெட்டுதில்லையே
கட்டாதகனியமுதை கட்டிவைத்தாலுமது கட்டுதற்கட்டு தில்லையே
ஒட்டாதபொட்டிலே ஒட்டிவந்தொட்டிடும் உந்தியின்வாசல்வழியே
அட்டாளதேசமெங் கெங்குநிறைகின்றன ஆதிபரமானந்தமே (கவி)



விருத்தம்.

ஆராருக்குள்ளாய் அணுவுக் கணுவாய் ஆதரவாய்
நூறுனநூறாய் நூறிஸ்க்கே பிறவியதாய் நூதனமாய்
நாறுன நூறாய் முகம்மதின் கோலமாய் நாமங்கொண்டு
பேராரும் பேராய் பெருகிவரு நூறாய் பேரின்பகடலிலே

இந்துஸ்தானி காவாலி.

பல்லவி

அல்லா அல்லாகுயா அல் அஹம்மதியா
அல்லா அல்லாகுயா ஒல் முகம்மதியா

அனுபல்லவி.

சொல்லாமல் சொல்லுமுழக்கமுயா சுருதியே ஆதம் அதமமீமுயா
விள்ளாமல் விள்ளும் வேதமுமாய் வேதவிளக்கே முகம்மதுவாய்

சரணம்.

காபுக்கபா கதம்மேயாஷின்யா காதிருமாமத மேதனியா
காபக்கபு சையனி குதுஷேயா கா-ஹ்ரா-யா-ஐன் சாதுயா (அல்)
அல்பின்வெளியில் நூனிலேயா அனுகுஆஷீக் மஹருக்குயா
இல்முல்யெக்கீன் ஐனிலேயா யெட்டுநூறு கமாலில்யா (அல்)
உள்ளமையான உஷாதிலேயா உயிராம்வாவு உண்மையில்வாயா
வல்லமைசுக்குன் மீமீலேயா வந்தனுக்கத்தூ மூன்றினில்யா (அல்)



நாதசங்கீதப்போன் மணிமண்டபம்—என்றமெட்டு.

வேத சங்கீதப்பொன் விடமுஞ் செல்வோம்
விழிகதிரொளி நடு வினையுங் கொள்வோம்

நாதசங்கீதப்பொன் நளினங்கொண்டே
நவமணிபதமலர் நாளும் சென்று
நாடுவோமே நாடுவோமே
நந்தியாமலர் தனில் பாடுவோமே (வேத)

அனுபல்லவி.

பச்சைக் கொடி பிடிப்பாள் பருவமொடு
பவளக்கொடி பிடிப்பாள் அருமையொடு
இச்சைகொடி யருப்பாள் இமையரொடு
இசைந்தராகம் படிப்பாள் யெந்தநாளும்
இகபரமாய் இகபரமாய்
இருவினை தனையருத் துதிதருவாள் (வேத)

ஜாதிமுறை நடப்பாள் சரிகையொடு
சதுர்மறை தன்னில் நிற்பாள் கிரிகையொடு
சோதியொடு நடப்பாள் யோகமொடு
சுழினபிரண. வமிருப்பாள் ஞானமொடு
சுகந்தருவாள் சுகந்தருவாள்
சுகிர்தகுண்டெழியினில் துதிபுரிவாள் (வேத)

முத்துமலரணிவாள் முகமலர்ந்தே
மோகன மாலைபூண்வாள் அகமகிழ்ந்தே
சித்தமலரில் வருவாள் தினவுகந்தே
தித்திக்கும் காதிர்முகையதீன் திடமிருந்தே
திடமறிந்தே யென் னிடமிருந்தே
தினந்தினங் கவியுர அருள்புரிந்தே (வேத)



விருத்தம்.

நலம்பெற தலைகீழாலும் நாடியே வணங்கினாலும்
கலையதை யொன்றதாக்கி கருத்தினில் பொருத்தினாலும்
மலையெனும் கெலிக்குள்ளே மண்டியிட்டுருகி நாளும்
குலமெனுந் தலத்தைக்கானார் குறைதனையகத்துவாரோ

பல்லவி.

கொழுந்து விட்டெரிகின்ற குகைக்குள்ளே ஒரு
குதறத்தாள் வருகின்றாள் அறைக்குள்ளே அவிடந்
தளிர்ந்து யெரியுகின்ற திறைக்குள்ளே அங்கு
தங்கியிருப்பாளவள் மறைக்குள்ளே

அங்கு தானாய் யெங்குந் தீனாய்
பொங்குந் தேனாய் தங்கு நூனாய் (கொழு)

காபுநூனு ஒன்றாய்க் கண்டவள் பெரு
கதிர்மதி ரவியினில் நின்றவள்
கூவுமாவைக் கையில்க் கொண்டவள் பல
கோலமாக யெங்கும் நின்றவள்

குடி கொண்டவள் அடி நின்றவள்
நடு விண்டவள் கடை கண்டவள் (கொழு)

அஞ்சனமாலையை யணிந்தவள் மேலும்
ஆயிரத் தெட்டிதழ் புரிந்தவள்
பஞ்சணமாலையை யணிந்தவள் யெவர்க்கும்
பாக்கியம் வளர்ந்தோரக் கொடுப்பவள்

பதம் பாடுவாள் ராகம் போடுவாள்
சதுராடுவாள் நமை நாடுவாள் (கொழு)

நாலு நாலுயெட்டி லானவள் அந்த
நாற்பத்தெட்டு கோண மானவள்
மூனு மூலக்குகை யானவள் அவள்
முக்காடு முக்காலும் போட்டவள்

அவள் முத்தாய் பவளக் கொத்தாய்
பச்சை வித்தாய் யெங்குஞ் சித்தாய் (கொழு)

யெத்தலமும் புகழ் கொண்டவள் ஆதி
யேகனுடன் மொழி விண்டவள்
பத்தெழுத்தானதில் நின்றவள் சிரு
பாலனன் காதிரு முகையதீன்

பாவம் பொருத்திட கோபம் தவிர்த்திட
நாவாள் துதித்திட சோபம் பெருத்திட (கொழு)

காமி சத்தியபாமா—என்ற மெட்டு

பல்லவி

மாராய் மனோமணியே யுந்தன் மனதிரங்குவாய்
மன திரங்குவாய் இரங்குவாய்
இரங்குவாய் இரங்குவாய் (மாராய்)

அனுபல்லவி

தேராய் எனது மனம் தேரும்படிக்கருள
சீராய் என்முன்னே வருவாய்
வருவாய் வருவாய் வருவாய் (மாராய்)

தாமிதம் யேனிது தயவிது தானிதோ
பாவி யெனது பலனே
பலனே பலனே பலனே (மாராய்)

அண்டர் புகழ்மணியே அமரர் புகழ்வணியே
தொண்டர்க்கிரங்கும் கணியே
கணியே கணியே கணியே (மாராய்)

தேவர் புகழ்மதியே தேடுதற்கருள் நிதியே
காவளர் போற்றும் மதியே
மதியே மதியே மதியே (மாராய்)



நல்வாக்கு நீ கோடடி—என்ற மெட்டு.

பல்லவி

சுக்குறெனு மீமடி அது ஹக்கன் வொடுக்கமடி

அனுபல்லவி

மக்கமகமுதடி நால்வேதம் ஒக்கவளைத்தாரடி (சு)

சரணம்.

நாலான வேதமடி புருக்கான் நாமத்திரானதடி
மேலான புருக்கானடி யாஷினில் மீண்டு மறைந்ததடி (சு)
மறைவான யாஷீனடி அல்ஹம்ந்தில் மறைந்துயிருந்தடி
விரைவான அல்ஹம்ந்தடி அலிபுபேய் வித்திலுரைந்ததடி (சு)

அலிபான பேயாமடி நுக்கத்தில் அடங்கியிருந்ததடி
கலிமாமுலையிலடி தெளிவைக்கண்டு அறிவாயடி (௬)

ஊமை யெழுத்தாமடி அது உலகெங்கும் மானதடி
ஆவனா காதிர்முகைய்தீன் சொல்லும் ஆமீனா ஆமிமடி (௬)



## அபிராமம் நெயினா முகம்மது சாஹிபு ஒலி அவர்களின் கனவின் தெரிசனம்.

பித்தந்தெளிய மருந்தோன்றிருக்குது—என்ற மெட்டு

பல்லவி.

கண்டது கனவோ கனவது நினைவோ
கண்ணே அறிகிலன் நான்

அனுபல்லவி

விண்டது வுனவோ விரிந்ததென் மனதோ
வேத நெயினாமதுவை மதுவை (கண்ட)

சரணம்

பின்னால் யெனக்கு பிறந்திடும் பலனை
முன்னால் எடுத்துறைத்தீர்
பிரபலம் பரவ வரும்பெரு இன்னலை
பிரட்டிநீர் அதை மறைத்தீர்
தன்னிலே யெனக்கு முன்னிலையடுத்து
தனித்தொருவரங் கொடுத்தீர்
தருமுனை பிரணவ சொருபத்தை தொடுத்து
தங்கு நெயினாமதுவை மதுவை (கண்ட)



## அதிராம்பட்டணம் செய்கு தாவுதொலி அவர்களின் அருமையாகிய கனவின் தெரிசனம்.

பல்லவி.

கண்டேன் கனவினிலே செய்கு தாவுதொலியை
கொண்டேன் மனதினிலே

அனுபல்லவி.

தொண்டுகள் புரிந்து துய்லுமன்னேரம்
தோசத்தால் மனது துயரிடுங்காலம்
பண்ட அயனையுளம் பணிந்திடக்கோலம்
பலபல வாகவே கலகலன்றென்முன் (கண்டே)

கொடூரமான சுரம் கொடுத்திடும்போது
குழந்தை யென்மனது குளர அப்போது
திடீரென ஒருசத்தஞ் செவியிலப்போது
செல்வஞ் சிறந்திட கல்பு குளிர்ந்திட (கண்டே)

மாயமாயொரு சத்தம் மனதினில்க் கண்டேன்
மயங்குமென் பிணியெல்லாம் மாய்ந்திட நின்றேன்
நாயகரொலிபதம் நாவிணுலுன்றேன்
நாட்டுப் பரதேசியின் நோட்டத்தில் சென்றே (கண்டே)

கெடுவைத்த கெடுப்போல் கிருபைகள் கொடுத்தீர்
கிருபாகடாக்ஷம் கிடைத்திட அடுத்தீர்
அருமையென் துயர்தனை அடியோடடித்தீர்
ஆங்காரங் கொண்டுநான் தூங்காமல் தூங்கயில் (கண்டே)

உருவமில்லாமல் நீர் ஓடியே வந்தீர்
ஒன்றுக்கு மஞ்சாதே யென்றென வென்றீர்.
கருவமில்லாமல் கவிதனைக் கொண்டீர்
காதிர் முகையதீன்சொல் ஆமீனுமென்றீர் (கண்டே)



## கமுதிமாநகர் முகையதீன் பிச்சை சாஹிபு அவர்களை கனவில் கண்டிடும் தெரிசனம்.

---

இச்சையை புரிந்தேன் முகையதீன்
பிச்சையை அறிந்தேன்

வச்சிரப் பதக்கம்போல் வளர்முகஞ் சொலிக்க
வந்திடும் பேரெல்லாம் வணக்கமாய் துதிக்க
அச்சமில்லாமல்யான் அயர்ந்துநான் தூங்க
அருமையா யென்முன் பெருமையோடருகில் (இச்சை)

கமுதிமா நகரில் காரணமுளங்க
கண்டபேரெல்லாம் கையெடுத்துதிக்க
ஜமாதியின் முன்நான் சஞ்சலம் உரைக்க
தங்கும் பிணியெல்லாம் தவிடதாய்ப் பறக்க (இச்சை)

தஞ்சாவூராஜன் தலமது அடுக்க
தலமகள் பிணியை தடுத்துநீரொடுக்க
பஞ்சனர் பிணியை பறத்திதூளடிக்க
பாவியென் பிணியெல்லாம் பரந்திட நடிக்க (இச்சை)

வாக்கினுல் யெனக்கு வரமது கொடுக்க
வந்துவுன்பாதம் வணங்கினுன் அடுக்க
கார்க்கு மென் ஆதி காவலிலிருக்க
காதிர் முகையதீன் கவிதனை பெருக்க (இச்சை)



## விருத்தம்.

சாஸ்திர மூட்டைகட்டி சரிவர ஓதினுலும்
சூஸ்திரமான் வேதத் தொழுகையை துடாராநெஞ்சம்
சேத்துலே கம்ப நட்டி செபித்திடு வாருபோலே
காத்துலே தூத்தும்பதர்போல் கானல்நீர் காணலாமே

தசரத ராஜகுமாரா—என்ற மெட்டு.

பல்லவி.

ஆதம்பாதந்தொழவேணும் யெந்தநாளும்அருள்சூளும் வினைமாளும்

அனுபல்லவி.

வேதமாமறையின் விளக்கத்தை அடுத்தே
வேந்தன் நமக்குச்சொன்ன விபரத்தை தொடுத்தே
சேதம்வருகுமுன்னே சேமத்தை யெடுத்தே
செல்வர் முகமதர் நபி தீனே
அதுதானே யெங்குந்தேனே பொங்குமானே (ஆத)

சரணம்.

இறப்பதும் பிறப்பதும் இதுவென்ன காலம்
இமயவரிடஞ் சென்ருல் இருக்குமோ சாலம்
மறப்பதுந் திறப்பதும் மனதுக்குள்ளாலம்

மன்னர் முகம்மது சொன்ன மார்க்கம்
அதின் நோக்கந்தனை பார்க்க அருள் பூக்கும் (ஆத)

இன்பமான துன்பம் இரண்டையொன்றாக்கி
இகபர வருவினை யிருவினை நீக்கி
வம்பமான துன்பம் வசைதனை போக்கி
வல்லவன் சொல்மொழி யாக்கி
யில்லை நோக்கி சொல்லை தூக்கி வினைபோக்கி (ஆத)

ஜாதியின் பேதத்தை சரிவரதீட்டி
தையலர் மோகத்தை தவிரவிட்டோட்டி
காதிர் முகையதீன் கவிதனை மூட்டி
கலக்கமில்லாமல் கவி பூட்டி
அருளை நாட்டி இருளையோட்டி தெளிவைதீட்டி (ஆத)



விருத்தம்.

கட்டுமாம்புலி கட்டையும் சுட்டலாம்
கடுகிலேழு கடலை புகுத்தலாம்
வட்டமாம் புலிவம்பை யொடுக்கலாம்
வன்னியிலோடி வானில் பறக்கலாம்
திட்டமாம்புலி திடத்தை யடக்கலாம்
தேவரோடுத் திரண்டுபோர் செய்பலாம்
மட்டமாம்புலி மமதையொடுக்கிட
மனது இல்லை இல்லைஇல்லை இல்லையே

பல்லவி.

கண்டேன் நானொரு கரும்புலியை
கட்டுக்கடங்கா கடுவெளியை
விண்டேன் எனது வெளிவெளியே
வேதம் ஓது ஆதங்குகையில் (கண்டே)

சரணம்.

அஞ்சுகோடு அஞ்சுநிறம் அஞ்சிலஞ்சு பஞ்சவர்ணம்
நெஞ்சிலொன்று நிருவிக்குணம்

அஞ்சிலொன்று அமூர்தகுணம்
பிஞ்சிலொன்று பிறவிக்குணம்
பேதம்ஓது ஆதங்குகையில் (கண்டே)

நாலுகாலு நாலுநிறம் நாவிலிருப்பது வெள்ளைநிறம்
காதிலிருப்பது கருமைநிறம்
கண்ணில் வருவது செம்மைநிறம்
நாசில்வருவது பச்சைநிறம்
நாதம்மோது ஆதங்குகையில் (கண்டே)

எட்டுநாலும் யெட்டுநிறம் எட்டுகடங்காவட்டநிறம்
எட்டில் நாலு இறைவன்புறம்
எட்டில் நாலு இமையோர்புறம்
எட்டில் நாலு எனதுபுறம்
வத மோது ஆதங்குகையில் (கண்டே)

சித்துப்பிறந்தது ராமன்நகர் செல்வஞ்சிறந்தது அபிராமம்
முத்துப்பிறந்தது வளப்புரியில்
மோட்சம் பிறந்தது சுளிமுனையில்
சத்துப்பிறந்தது காதிர்முகைதீன்
சாதுஓதும் ஆதங்குகையில் (கண்டே)

---

பல்லவி.

அந்திபகலற்ற நந்திக்குள்ளேயொரு
தந்தி வருகுதடி அந்த

அனுபல்லவி.

பந்திக்குள்ளே பெரும் பந்தமெரியுது
பார்த்து அறிவோமடி (அந்தி)

சரணம்.

அறிவான அறிவுக்குள் அறிவொன்றிருக்குது
அலஹம்தெனுங் கொடிக்குள் அது
அருவாகி உருவாகி அழகாகி பலதாகி
ஆணிப்பொன் னனதடி (அந்தி)

நூறுன நூனுக்குள் நூறென்றிருக்குது
நூறுன நூனுக்குள்ளே அந்த

நூனுக்குள் நூருசி காபாகி நாராகி
நூதனமானதடி (அந்தி)

முத்தான முத்துக்குள் முத்தொன்றிருக்குது
முகம்மதெனும் கொடிக்குள் அந்த
முத்துவுருகியே யெவ்வுயர்க்குயிராகி
முக்காலமானதடி (அந்தி)

ஷீனன ஷீனுக்குள் சிற்றென்றிருக்குது
சித்தான சித்துக்குள்ளே அந்த
சித்துக்குள் சித்தாகி சிற்றிஸ்மானதே
தெய்வபாத்துக்குள்ளே (அந்தி)



விருத்தம்

ராகமுந்துவேச காமம் ராணுவக் குரோத மச்சரம்
மோகமா லோப ஈரிசை முழக்கமாம் சூயை டம்பம்
தாகமும் அகங்கா ரம்மு தர்ப்பமு மதமு விட்டு
சோகமா முக்கோ ணத்தில் தொடுத்துநாம் வாழு வோமே

பல்லவி

குருக்குடியிலே குடியிருந்தேனடி குலத்தில்நின்றொரு
குடிசை கட்டினன் குடி புகுந்தேனடி (குரு)

அனுபல்லவி.

அருங்குலத்தினில் அமுர்தமுண்டேனடி அதிலே நின்றொரு
அறிவுக்குள்ளொரு அருளைக்கண்டேனடி (குரு)

திருக்குளத்திலே தெய்வத்தை நாடியே
தின்குலத்திலே மானத்தைப் போற்றியே
கருங்குலத்திலே கள்ளனை யோட்டியே
கலிமா முலையைக் கயற்றில் பூட்டியே
கருத்தினில் தினங் கசடறுத்தேனடி அதிலே நின்றிடு
காலன்எமனை கண்டயந்தனடி (குருக்)

காட்டு மந்தையில் ஆடு கத்துதடி அதனைகண்டொரு
கடுவாய் நாய் நரி கதறிவருதடி
மேட்டு மந்தையில் நாட்டமாகுதடி அதிலொரு நரி
மிரட்டி யரட்டி யுருட்டி பார்க்குதடி

கூட்டமாகிய குருவனத்திலே
குமரிமந்திரங் கூறுநாளிலே
தேட்டமாகிய திருமணத்திலே
தித்திக்குந்தேனு மத்திக்கிடையிலே
திரண்டு அமுர்த வடியுங்காலிலே அதிலேரெண்டெலி
திருடிப்போன திறமறியேனடி (குருக்)

கானில் ரெண்டெலி கதறிவருதடி அதைப்பிடித்திட
கலையம்பரியின் கருவருறியேனடி
தேனுமரத்தில் திணைவடியிதடி அதையருந்திட
திரண்ட வண்டுகள் பறந்தருந்துதடி

உருண்ட வண்டுகள் திரண்டுபாயுது
உற்ற எலியது நத்தி வருகுது
மருண்டவண்டுகள் மணத்தைக் கொள்ளுது
மாசற்ற வீதியில் மாசறநாடுது
மனமா மனது மனமுருகுதடி மனதுகேற்ற
மாய்கையானது சாய்கையானதடி (குரு)

எட்டடியிலோர் மட்டமானதடி அதையுங்கண்டுநான்
எட்டிடிக்கிட எட்டுதில்லையடி
முட்டிமுட்டியே முனையிலோடுதடி அதிலோர்வேடன்
முனையிலிருந்து கணைகள் போடுதடி

கட்டுவேங்கையுங் கரும்புலியதும்
கண்டமான்மரை கொண்டதானமும்
கிட்டுவேங்கையுங் கீரிப்புலியதும்
கிழட்டு நாய்கரி கிருக்குரங்கது
கின்னரம் பாடியே கீதம்போடுதடி காதிர்முகையதீன்
கிருபை ஐனில் உருமையாகுதடி (குருக்)

---

சுருளிமலைமீது—என்ற மெட்டு.

பல்லவி.

சரணவப்பிராண ஒய்யாரி எங்கும்
சகலவுயிர்க்குயிரான்மேரி ஆதி

சத்திய குலத்தில் உத்த மத்திவிழியாலே சுத்த
சைவிபுகழ் மெய்வி
திரிலோகம்புகழு மஞ்சஞ்சாரி யெங்கும்
தெய்வபக்தியாக வந்தவதாரி இந்த
பாரினிலே யெல்லவர்க்கும் கோரியமுதூட்டும்
மனமாரி மகாமேரி
காலமா விசத்தையுண்ட மேரி அந்த
காலமும்முக் காலமதில்பூரி நல்ல
ஆலம்பல கோலமான வாலமதி மீதிலேறி
வருவாய் சுகம் தருவாய்
சொல்லால் முழக்கமிடுஞ் சுருதி அந்த
சுருதிதனில் நின்றுலாவும் வருதி நாளும்
விள்ளாமல் விள்ளுங் காதிர்முகைய்யதீனெனு வாவியில்
விளங்கும் யெங்கும் துலங்கும்

---

பல்லவி.

தேடிவந்தேன் நானோடியே ஓடியே
ஓடியே ஓடியே ஓடியே (தேடி)

அனுபல்லவி.

அந்த திருவுக் குளருவை அறிவுக்குருவை (தேடி)

சரணம்.

பாடி பலனைத்தேடி பஞ்சகல்யாணியேறி
கூடிக்குலாவி வாடியே வாடியே
வாடியே வாடியே வாடியே (தேடி)
நாடி நலனைத்தேடி நாட்டமதனிலேறி
பாடிபலனைக் கூடியே கூடியே
கூடியே கூடியே கூடியே (தேடி)

---

நீயே தயவுதவ நினைவோ—என்ற மெட்டு

பல்லவி.

தாயேயுனது தயந் தந்தாளுவாயே நீயே
தனிமையா யெனதுளம் தயவாய் இப்போது (தாயே)

அனுபல்லவி.

மாய முமையல்லால் மாய்கை வேறுண்டோ
தூயஅறிவிலென்னை துய்தாக்கி ஆண்டிட (தாயே)

சரணம்

உற்றோர் பெற்றோரை நம்பி உலகை நான் வுகந்தேனே
உருவாம் மதிதயன உண்மையை யிகழ்ந்தேனே
பெற்றோர் உத்தாரைநம்பி பிரமோசம் போனேனே
பித்தம்தெளியு மந்தபற்றற்ற எல்லையில் (தாயே)

எத்திமுதனுகளை யியார யெடுத்தேனே
ஈயாரை கண்டுமனம் எதிர்த்து நான் மறித்தேனே
சத்தியம் தனைவிட்டு சம்பிரதாயங் கொண்டேனே
சத்தியபூபதி சகலோர்க்கு அதிபதி (தாயே)

வீணுக்குடம்பெடுத்து விதிவச மானேனே
வித்தகரைக்கண்டு எத்தனங்கொண்டேனே
ஆணுவந் தனைக்கொண்டு ஆகத்தை மறந்தேனே
அடியேன் துயரகற்று வடிவே மனோன்மணி (தாயே)

மாயவுலகை நம்பி மதிமோசம் போனேனே
மங்கையர்க்காளாகி சங்கையை யுகந்தேனே
காய மதுவைவுண்டு காலத்தை கழித்தேனே
காதிர் முகைய்யதீன் கவிதனுக் கிரங்கியே (தாயே)

---

பல்லவி.

அழுக்காகும் வகையென்னடி அதையறிய
அறியும்வகையைச் சொல்லடி

அனுபல்லவி.

புளுக்கக்குணத்தைவிட்டு புண்ணியம் தன்னைக்கண்டு
அழுக்கு மனத்தைவிட்டு முளுக்கையறுக்குவிதம்
அலிபுக்குளொழுகிய அலிபுவெள்ளலிபை
தெளிவிக்குள் தெளிவாய் திறமுடனறிய (அ)

சரணம்

சிங்கம்நமை விரட்டி ஜெயிக்க முன்னே துரத்தி
அங்கம் தமையாட்டி அலிபைக்கட்டி

அறிவிக்கு ளறிவெனும் அறிவுக்குளுருட்டி
குறியெனும் நமன்வலே கொளுத்திடமறித்து (அ)
குன்னென்றெழுந்தவிடம் குருவுமறைந்த தடம்
கண்ணென்றெழுந்தவிடங் கருத்தில்புடம்
கட்டிப்பிடியடி கமலக் கருவில்
தொட்டு நடியடி துறையாமலரில் (அ)
ஷாதுவடிவில்பதம் தங்குநபியின்விதம்
ஓதும்வழியில் நிதம் உகந்து மதம்
ஒடுங்கு வுணர்வினி லடங்கு மனதில்
துடங்கு நவநிலே யடங்கும் தவமதில் (அ)

---

பல்லவி.

சேதி கேள்க்கலேயோ அவன்
சொன்னது பார்க்கலேயா ஒரு (சேதி)

அனுபல்லவி.

ஆதியில்லவ ஞேதியபடி
சாதியமானிதந் தந்தநாளினில் (சேதி)

சரணம்.

தன்னேயே விடுக்கசொன்னுன் தலேவனே யடுக்கச் சொன்னுன்
பின்னலே விடுக்கச் சொன்னுன் பேரின்பமுறும ஆரணமதில் (சேதி)
ஏழுசிபத்தெடுக்க சொன்னுன் ஏகன்தனில் விடுக்கச் சொன்னுன்
வாழுன் சிபத்திலென்று வந்திடுவழி தத்திடு நாளில் (சேதி)
கள்ளத்தை விடுக்கச்சொன்னுன் கடவுளே துதிக்கச்சொன்னுன்
உள்ளத்திலடக்க சொன்னுன் உஷாதெனு அசல் மஜிதீன்வாவியில்
ஏமன்கணே விடுக்கச்சொன்னுன் ஏகன்வழி நடக்கச்சொன்னுன்
காமன்கணே யறுக்கசொன்னுன் காரணம்பெரு ஆரணமதில் (சேதி)



சந்த விருத்தம்.

கோரிரு விழிகள் சிவக்கனல்பறக்க
கொதித்தழித்திடு இடிமுழக்க
காரிடி தொனிக்க கருமழைதெரிக்க
காத்தினில் கனல் மழுபிடிக்க

நேரடியடுக்க நிறமதுகருக்க
நீண்டதோர் தந்தமூம்நாவோ
மாரடி எமன் வருகுமுன்னுளோ
வழிமறித்திடுபவர் எவரோ

இருசெவியடைத்து நரம்பெலாவொடித்து
இருண்டமெய் இருவிழி கடைத்து
வரும்விழியடைத்து வாசியைப் பிடித்து
வாக்கையும் நோக்கையும் கெடுத்து
அரும்பெரு சுவையும் அமுதையும்விடுத்து
அடியொடு நடுமுடி தொடுத்து
எரிநரகதுபோல் வருஎமன்திறமை
எடுத்துரைப்பதுக் கிடமில்லையே.



பல்லவி.

விடுவானோ எமன் நமைச் சும்மா
விடுவானோ எமன்

அனுபல்லவி

கடைக்கண் நடுவில் கனல்பொரிபறக்க
குடைக்கண் நடுவில் கொழுத்தும் எமன் (விடு)

சரணம்.

பூதமதிலைந்து புலனொடுங்கிட
புலனிலேயைந்து பொறியொடுங்கிட
வாதமதில் பித்தம் வந்து மடிந்திட
வளரும் சிலேர்ப்பனம் வரமிரங்கிட (விடு)

நாடி பத்தது நடுங்கி யொடுங்கிட
நமனும் பிணிமூன்றும் நசிந்து மசிந்திட
கூடிவாய்வுபத்து குளரி மயங்கிட
கூட்டங்கலைத்திடும் நாட்டுஎமன் நமை (விடு)

நரம்பெலும்பது நற நற வெனவே
நாடித்தசைகள் கர கர வெனவே
திரண்டயெலும்பது திடு திடு வெனவே
திட்டிடு எமன் கிட்டிடும் காலை (விடு)

அண்டம் புவியெல்லாம் அதரி நடுங்கிட
ஆகாய மதுவெலாம் அனலாய் உருகிட

கண்டவர்களெல்லாம் கண்டுமயங்கிட
கட்டிடும் ஏமன் தொட்டிடும் நாளே (விடு)

---

பல்லவி

தானாரு தந்தை தாமாரு பெற்ற தாயாரு
சுற்றத் தாமாரு (தா)

அனுபல்லவி.

கோனாரு தான் ஆரு
கொல்லுஎமன் நம்முயிரை கொண்டுருட்டிபோகும்போது (தா)

சரணம்.

ஊரெங்குங் கொடிகட்டி உகந்துநாம் வாழ்ந்திருக்க
வீரோங்கு ஏமனுயர் விரட்டிக்கொண்டு போகும்போது (தா)
பாரெங்கும் கொடிகட்டி பரம்பரையாய் ஆண்டிருக்க
பற்றிஎமன் நம்முயிரைப்பற்றிக்கொண்டு போகும்போது (தா)
பெண்டுபிள்ளை மக்களுடன் பிரியம்வைத்து நாமிருக்க
தொண்டஎமன் நம்முயிரை துரத்திகொண்டுபோகும்போது
ஊருஜனம் பந்துடனே ஓகப்புவைத்து நாமிருக்க
சோரமில்லா ஏமனுயர் சுருட்டிக்கொண்டுபோகும்போது (தா)





பல்லவி.

மங்களமே மங்களமே மங்கள மஹமூதர்க்கும்

அனுபல்லவி.

சங்கையுள்ள மாமதினா சைய்யதிரசூல் நபிக்கும் (மங்)

...துணை நால்வருக்கும் உண்மைபாத்து முத்தவர்க்கும்
...அசனுசைன் தனக்கும் காதிருமுகைய்தீன் தனக்கும் (மங்)
கொதுபு மீராமுகைய்தீன் குலக்கொழுந்தாம் ஹமிதொளிக்கும்
சதுராடும் செய்கு தாவுத் சையது தாளடிக்கும் (மங்)
செய்யதிபுறாஹிமுக்கும் செல்வரபுதாகிருக்கும்
மய்யல் நெயினுமதுக்கும் மஸ்தானொளி மலரடிக்கும் (மங்)
உற்றவர்க்கும் பெற்றவர்க்கும் உண்மையுள்ள பேர்களுக்கும்
மற்ற யென்குலத்தினர்க்கும் மங்களமே மங்களமே.

சுபம்.